ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

இது

ஆழ்வார்களருளிச்செயல்களாகிய

நாலாயிரப்பிரபந்தத்தில்

திருமழிசையாழ்வாரருளிச்செய்த

# திருச்சந்தவிருத்தமூலமும்

பிரதிபதமென்னும்பதப்பொருளும்.

திருப்பதி ஸ்ரீநிவாசாசாரியராலும்

திரிசிரபுரம்

வித்வான்

வி. கோவிந்தபிள்ளையாலும்

பலபிரதிகளைக்கொண்டு

ஆராச்சிசெய்வித்து

ஊவேரிபுத்தேரி

பெருமாள்நாயகர்குமாரர்

சாஹண்டவுஸ்

ம-ள-ள-ஸ்ரீ

**செங்கல்வராயநாயகர்**

தமது வேதாந்தவித்யாவிலாச

அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தனர்.

பிரபவ - ௵ ஆவணி - ௴

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| க | உஅ | பலிஷட | பலிஷ்ட |
| ங | உஅ | பரயோ | ப்ரயோ |
| சு | கஅ | வோஜீஜ | வோஜ்ஜீ |
| அ | கசு | காததே | காத்தே |
| ௰உ | உ0 | விக்ஞாநதவி | விசாநதாமி |
| ௰உ | உங | வேதாங் | வேதாநு |
| ௰உ | | பிரஹிணோ | பிரஹிணே |
| ௰ச | உசு | விதயாதி | விததாதி |
| ௰ச | ங0 | சம்க்ஷேபண | சம்க்ஷேபேண |
| ௰கூ | ௰ | ருக்ந்த | ருகந்த |
| உக | உஎ | தாழ | தாழ் |
| உஉ | கச | பாத்கனே | பாதகனே |
| உங | கச | ஸ்ரீகரரான | ஸ்ரீகரான |
| ஙஎ | உகூ | சிருஷடி | சிருஷ்டி |
| சஉ | கரு | சாங்ய | சியாம்ய |
| சரு | அ | கோபஜா | கோபஸஜா |
| | கரு | ப்ர்ஹமா | ப்ரம்ஹாதி |
| சுஎ | கீழ்வரிகோட் | வக்கிறம் | வக்கிரம் |
| | | நெத்தி | நெற்றி |
| சுஅ | ங0 | நக்ரே | நக்ரோ |
| அஅ | அ | அழுத்தின் | அழுத்தின |
| ௱உ | உக | சிர்க | சிர்க் |
| ௱கஉ | கரு | னெனன | னென்ன |
| ௱கரு | கக | அநுஸ் | அநுஸ |
| ௱கசு | கஎ | வாழ்ததெ | வாழ்த்தெ |
| ௱கஅ | சு | வததாலே | வத்தாலே |
| ௱கக | எ | கிரகததை | கிரகத்தை |

உ-வது பக்கம் அ- வரியில் சம்புத்திஅத்தியாஹரித்துக்கொள்ளு வதாவது வேறுவேறு தன்மையாய் என்கிற மூலபதத்திற்கு பரஸ் பரவிலக்ஷணமானதேவதாதிபதார்த்தங்களுக்கும் ஆத்துமாவாய் என் பதில் ஒருபுருஷபதம்வருவித்து ஆத்மாவாயிருப்பவனே என்று பொரு ள்கொள்வதாம்.

உஎ -வது வரியில் அத்தியயனுதிசட்கர்மங்களாவது தான்பிற ரிடத்தில்படித்தல் பிறருக்குத்தான்படிப்பித்தல் தான்யாகஞ்செய்தல் பிறருக்குச்செய்வித்தல் தான்பிறருக்குக்கொடுத்தல் பிறரிடத்து தான் வாங்குதல் முதலியவாம்.

உஅ- வது வரி கர்மானுஷ்டான யோக்யவசந்தாதிகளாருவது வசந்தருது கிரீஷமருது வருஷருது சரத்ருது ஹேமந்தருது சிசிர ருது என ஆரும்

அவையாவன.

வசந்தருதுவாவது தென்றல்வீசலும் வண்டு கிளி பூவைஅன்றில் குயில் இவை மகிழ்தலும் மாங்கனி யுதிர்தலும் புன்னை மகிழ் தாழை சண்பசம் இவைமலர்தலும் இந்திரகோபம் கேகயமுதலிய மெலிதலு மாம் சித்திரையும் வைகாசியும் சேர்ந்த இளவேனிற்காலமென்றும் பெயராம்.

கிரீஷ்மருதுவாவது கோடைக்காற்றுவீசலுங் கானல்தோன்றலுங் காடை வலியான் வானம்பாடி காகங் கவுதாரி இவைமகிழ்தலும் மல் லிகை புளி பாதிரி யிவை மலர்தலும் பாலை காஞ்சிரம்நாவல்இலுப்பை யிவை காய்த்தலுமாம் ஆனியும் ஆடியும்சேர்ந்த முதிர்வேனிற்காலமெ ன்றும்பெயராம்.

வருஷருதுவாவது வாடைவீசலும் இந்திரகோபம் மயில் சேகய மகிழ்தலும் வெண்காந்தள் செங்காந்தள் கொன்றை கூதாளம் வேங் கை காக்கணம் முல்லை கடம்பு காயா குருந்து இவைமலர்தலும் அன் னங் கிளி குயில் வருந்தலும் தாமரைமுதல் நீர்மலர்ஒடுங்கலுமாகும் ஆ வணியும் புரட்டாசியும்சேர்ந்த கார்காலமென்றும் பெயராம்

சரத்ருதுவாவது கூதிர்க்காற்றுவீசலும் குருகு அன்னங் கொக் கு சகோரஞ் சங்கு நண்டு நத்தை இவைமகிழ்தலும் நீர்தெளிதலும் மீனினஞ்செனித்தலும் மேகஞ்சூல்கொள்ளலும் பாரிசாதஞ் சிறுச ண்பகம் செம்பரத்தை சந்தனம் நாணல் இவைமலர்தலும் பலபறவை விலங்கு மக்கள் வருந்தலுமாகும் அல்ப்பிசியும் கார்த்திகையும்சேர்ந்த கூதிர்காலமென்றும்பெயராம்

ஹேமந்தருதுவாவது கொண்டல்வீசலுஞ் சிதகன் கூகை ஆந்தை யிவைமகிழ்தலும் மாவுஞ் செவந்தியும் மலர்தலும் இலந்தை பழுத்தலும் செந்நெல்விளைதலும் கரும்புமுதிர்தலுமாகும் மார்கழியும் தையும்சேர்ந்த முன்பனிக்காலமென்றும்பெயராம்

சிசிரருதுவாவது உலவைக்காற்றுவீசலும் பலபுறவினமுங் கானக்கோழியும் மகிழ்தலுங் கோங்கும் இலவும் பூத்தலும் பேரிச்சு பனை இவைபழுத்தலும் பரித்தி வெண்சுளை இவைவெடித்தலுமாகும் மாசியும் பங்குனியுஞ்சேர்ந்த பின்பனிக்காலமென்றும்பெயராம்

உகூ - வது வரி நிர்வாஹ்ய பாவநிபந்தனமாவது ஏர்ப்பாட்டின்படி நடந்துகொள்ளுகையால் உண்டாகுகை

ஙயி - வது வரி நிர்வாஹகபாவ நிபந்தனமாவது ஏர்ப்பாட்டின்படி நடத்துகையால் உண்டாகுகை

ஙக-வது வரி அநுஷ்டேயமான ஆக்நேயாதியாகஷட்கமாவது ஆக்கிநேயம் அக்கிநிசோமீயம் உபாம்சுயாசம் அயிந்திரங்களிரண்டு அயிந்திராக்னம் என்பதாம்

ங - பக்கம் யிஅ-வரி விவேகாதிசப்தகமாவது விவேகம் விமோகம் அப்பியாசம் கிரியை கல்யாணம் அனவசாதம் அனுத்தரஸம் என ஏழாம்

இதற்குவிபரம் விவேகமாவது சுத்தாகாரத்தால் தேகத்தைவிர்த்திசெய்தல்

விமோகமாவது பதார்த்தத்தில்மோகமின்றியிருத்தல்

அப்பியாசமாவது தன்சுவாநுபவமாறுமை

கிரியையாவது தன்வருணாசிரமத்துக்குத் தக்கசெய்கை

கல்யாணமாவது சத்தியமுதலியஆறும் இதன்விபரம் சத்தியம் ஆர்சவம் தயை தானம் அயிம்சை அநபித்தியை ஆகஆறு

அநவசாதமாவது இஷ்டவத்து கைவிட்டகாலத்தும் மயக்கமின்றியிருத்தல்

அநுத்தரஸமாவது தனக்கு இஷ்டமானவத்துகிடைப்பினும் அதிகசந்தோஷமில்லாமல்இருக்கை

ஷ யிகூ - வது வரி ஞானசத்தி யாதிகளாகிற ஆறும் என்றது ஞானம் சத்தி பலம் அயிஸ்வரியம் வீரியம் தேசசு

உயி- வது வரி சேதநகதாபஹதபாப்மத்வாதிகுணஷ்டகமாவது புண்ணியபாபசம்பந்தமின்றியிருக்கை பாலியஎவ்வனவார்த்திகமின்றி

யிருக்கை உற்பத்திநாசமின்றியிருக்கை பயசோபமின்றியிருக்கை பசியின்றியிருக்கை தாகமின்றியிருக்கை கோரினபலன் உடனேகிடைக்கை நினைத்தகாரியத்தை தப்பாமல் முடிக்கை

சு - பக் - ௰அ - வரி ஸ்வொஜ்ஜீவநோபாயமாவது தன்னுடையசமுசாரபந்தம்நசிக்கைக்கு உபாயமாகஇருக்கை அதாவது மோட்சோபாயசாதனத்திற்குஇசைந்திருப்பதாம்

ஷை பக்-உந-வரி பரிசமாப்பியமென்பது நிறைந்திருப்பது

௰உ - வது பக்கம் ௰உ - வரி உறவுருசியென்ற சாமானுதிகரண்யத்துக்கு வேதத்தில் சொல்லப்படுகிற சுவர்க்காதிபலன்களில் அதிகாரிகளுக்குண்டாகிறருசியை நிறைவேற்றுபவனென்பதாம்

ஷை பக்கம் ௰க - வது வரி கேனோபநிடத்துவாக்கியம் அவிக்ஙியாதம் விசானதாம் என்பதற்கு அர்த்தம் பிரமந்தெரியுமென்றுசொல்பவனுக்கு தெரியாதென்று தாத்பரியம்

ஷை பக்கம் ௰அ-வது வரியில் தஸ்மைவேதாறு பிரஹிணோதி என்பது சதுர்முகனுக்குவேதங்களைக்கொடுத்தானென்பதாம்

ஷை பக்கம் உக - வது வரியில் பிரம்ஹாணவிததாதி என்பது உபநிடத்வாக்கியம் அது சதுர்முகனை பிறப்பித்தவன்என்பதாம்

ஷை பக்கம் உரு - வது வரி சம்க்ஷேபேண என்பது சுருக்கம்

௰ந-பக்கம் உந-வரி சுபாசிரயமென்பது யோகிகள்தியானஞ்செய்யும்வடிவாம்

௰ச- வது பக்கம் எ - வரி அஜஹத்சுபாவமாவது தன்சுபாவம்விடாதிருக்கை

௰ரு-பக்கம் ௰-வரி அத்யாஹாரலப்தமாவது ஸ்வஸாமர்த்தியத்தாலே இல்லாதபதத்தைக்கொண்டுவந்தபடியால் வந்தபதம்

ஷை பக்கம் உஎ-வரியில் திவு கிரீடாத்யுதியிறே என்கிறதிவுதாது விளையாட்டிற்கும் பிரகாசத்திற்கும் அர்த்தமல்லவாஎன்கிறபடி

௰சு- பக்கம் எ-வரி ஆதித்யாந்தர்வர்த்தியன்றோ என்பது சூரியனுக்குள்ளேயிருப்பவனல்லவாவென்பதாம்

ஷை - பக்கம் ௰ந - வரி சிக்ஷாதிஅங்கமாவது சிட்சை வியாகரணம் சந்தசு நிருத்தம் சோதிஷம் கல்பம்

௰அ - வது பக்கம் ௰ச - வரி சங்கருஷணுதியாவது லயகர்த்தாவாய் சங்கருஷணன் திதிகர்த்தாவாய் பிரத்யும்ன சிருட்டிகர்த்தாவாய் அனிருத்தன்

ஷை பக்கம் உச - வரி ஆமுஷ்மிகத்தில்என்பது மேலுலகத்தில்என்பதாம்

உ௫ - வது பக்கம் சுபாசிரயம் யோகிகள்தியானஞ்செய்யும்வடிவம்

ஷை வரி வியாவிர்த்தம் வேறுபட்டிருப்பது

உ௫ - பக்கம் உஅ- வரி வாக்யசேஷம் ஒருகால்சொல்லிமிகுந்தபதம்

ஷை- பக்கம் உகூ- வரி அகடிதகடனுசாமர்த்தியத்தையென்பது கூடாததை கூட்டிவைக்கை

உஅ - பக்கம் ௩௰ - வரி அன்னுவயம் கர்த்தாகர்மகிரியையோடு கூட்டுகை

ஷை பக்கம் ௰உ-வரி க்ஞானகுணகத்வாத்தென்பது க்ஞானமே குணமாகஉடையவனுனபடியால் க்ஞானமென்று சீவனுக்குப்பெயர்

உகூ-பக்கம் ௰கூ-வரி ததாசிரயவேதத்திலே ஔபசாரிகம் என்பது சுரத்துக்குஆசிரியமானவேதத்தை லக்ஷணையால்காட்டுகை

௩௰-பக்கம் பூர்வோத்தரவிசேஷணயுக்தனுன என்பதுமுன்சொன்னதருமங்களும் இனிசொல்லப்போகிற தருமங்களும் உண்டானதென்பதாம்

௩ச - பக்கம் பிராப்பியபிராபகாந்தரவிகிர்மோகத்தைச்செய்கிறவென்பது பிராப்பியம் பலம் பிராபகம் உபாயம் - விகிர்மோகம் விடுகை

௩எ-பக்கம் அனந்தரமென்பது அதன்பின்னென்பதாம்

ஷை பக்கம் ததந்தர்யாமியென்பது அநுபிரவேசித்ததாம்

ச௰-பக்கம் ஸ்பிரஹணீயம் என்பது ஆசைப்படத்தக்கநிறம்

ச௫-பக்கம் மாயா வயூநம் கியானம் இம்மூன்றும் ஒருபொருள்

ஷை பக்கம் துரத்தியாயஎன்கிறமாயை தாண்டக்கூடாதமாயை

பரிச்சேதமேன்பது அளவு

ஸஜாதியென்பது ஒருஜாதி

சாமானுதிகரண்யமாவது இருவகைப்பொருளும் ஒன்றுபட்டு முடிதல்

அன்றிக்கேயென்பது முன்சொல்லியபதத்திற்கு வேருெருஅர்த்தம்உண்டென்பதாம்

இப்பதங்களே பலவிடங்களிலும் மாறிமாறிவரும் அவ்வவ்விடங்கடோறும் கண்டுகொள்க

பாட்டுகள்தோறும் சிலசிலபதங்களுக்கு திவாகரம் நிகண்டு சூத்திரம் உபநிஷத்து முதலிய பல உதாரணங்களை யெடுத்துக்காட்டியிருக்குமவ்வவ்விடங்களையும் பகுத்தறியவேண்டியது

## விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சூளையில், கனையான்குட்டைத்தெருவில் ம-ஈ-ஸ்ரீ வீ. செங்கல்வராயநாயகரவர்கள் வேதாந்தவித்யாவிலாச அச்சுக்கூடத்தில் வாங்கிக்கொள்ளலாம்.

இப்போது அச்சிட்டுவருகிறபுத்தகங்கள் ஸ்ரீராமாநுஜபாஷியம் ச்ருதப்பிரகாசிகை வியாக்கியானத்துடன் தெலுங்கெழுத்தில் அச்சிட்டுவருகிறேம் இனிகிரந்தாக்ஷரத்திலும் அச்சிடுவோம்.

நம்மாழ்வாரருளிச்செய்த சரமபிரபந்தமாகிய திருவாய்மொழிமூலமும் அதன்பிரதிபதமும் அச்சிட்டுவருகிறேம்.

இது அப்போதைக்கப்போது வேண்டியவர்கள் தின்காப்பி பாரம் - க - இ அணா - ஜ - திக்குகாப்பி பாரம் - க - இ அணா - கஉ - வேண்டியபோதெல்லாம் ஷை அச்சுக்கூடத்தில் வாங்கிக்கொள்ளலாம்.

திருச்சந்தவிருத்தம் திக்குகாப்பி புத்தகம்- க - இ அணா ௰உ - தின்காப்பி புத்தகம் - க- இ அணா - அ - வேண்டியவர்கள் விலைக்குவாங்கிக்கொள்ளலாம்.



ஹரி:ஓம்.

# திருச்சந்தவிருத்தம்.

தனியன்.

தருச்சந்தப்பொழிறழுவு தாரணியின்றுயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய் திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்துங்காரகிலுங் கமழ்கோங்குமணநாறுந்
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே

இதுவுமது-வெண்பா.

உலகுமழிசையுமுள்ளுணர்ந்துதம்மிற்
புலவர்புகழ்க்கோலாற்றூக்க—வுலகுதனை
வைத்தெடுத்தபக்கத்தெம்மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது.

திருச்சந்தவிருத்தம்.

பூநிலாய வைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்த்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்தகா லிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்
நீநிலாய வண்ணநின்னை யார்நினைக்க வல்லரே. (க)

(இதனது பதப்பொருள்.)

| | |
|---|---|
| பூ | பூமியிலே |
| நிலாய | வர்த்திக்கிற |
| ஐந்துமாய் | சப்தாதிகுணங்களைந்துமாய் |
| புனற்கண் | அப்பினிடத்திலே |
| நின்ற | வர்த்திக்கிற |
| நான்குமாய் | சப்தஸ்பரிசரூபரசங்கள்நாலுமாய் |
| தீ | தேஜஸிலே |
| நிலாய | வர்த்திக்கிற |
| மூன்றுமாய் | சப்தஸ்பரிசரூபங்கள்மூன்றுமாய் |
| சிறந்த | பலிஷ்டமான-சிறப்பு-பலம் |
| கால் | வாயுவிலே வர்த்திக்கிற -கால்-வாயு |

| | |
|---|---|
| இரண்டுமாய் | சப்தஸ்பரிசங்களிரண்டுமாய் |
| மீ | மேலே-மீதென்று ஏற்றத்தையுடைய ஆகாசத்தைச்சொல்லுகிறது |
| நிலாயது | வர்த்திக்கிறது |
| ஒன்றுமாகி | சப்தகுணமொன்றுமாய் |
| வேறுவேறுதன்மையாய் | பரஸ்பரவிலக்ஷணமான தேவாதிபதார்த்தங்களுக்கும் ஆத்மாவாய் இங்கேசம்புத்தி அத்தியாஹரித்துக்கொள்ளுகிறது. |
| நீ-நிலாயவண்ணம் | நீகாரியகாரணவர்க்கத்திலே வர்த்திக்கிற பிரகாரத்தை |
| ஆர் | எவர்கள் |
| நினைக்க | அறிய |
| வல்லர் | சமர்த்தர்கள். |

பூநிலாயவைந்துமென்று தொடங்கி ஐந்துநாலுமூன்றென்றது தத்தத்குணங்களோடே உத்தரோத்தரகாரணகுணங்களையுங் கூட்டிக்கொண்டு-குணங்களுக்கும் ஈசுவரனுக்கும் சாமாநாதிகரண்யம். நிர்வாஹ்ய நிர்வாஹகபாவநிபந்தனம்.

உன்னுடைய உபாதாநகாரணத்வத்தையும் ஜகத்கததோஷாஸம்ஸ்பரிசத்தையும் வைசேஷிகாதிகளறியமாட்டார்கள். வேதாந்ததாத்பரியமறிந்தவர்களே நினைப்பார்களென்று தாத்பரியம். (௧)

ஆறுமாறு மாறுமாயோ ரைந்துமைந்து மைந்துமா
யேறுசீரி ரண்டுமூன்று மேழுமாறு மெட்டுமாய்
வேறுவேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமா
யூறொடோசை யாயவைந்து மாயவாய மாயனே. (௨)

(இ - ள்.)

| | |
|---|---|
| ஆறும் | அத்தியயநுதிஷட்கர்மங்களும் |
| ஆறும் | கர்மானுஷ்டானயோக்யவசந்தாதிகளாறும் இவ்விரண்டுசாமாநாதிகரணியம் நிர்வாஹ்யநிர்வாஹகபாவநிபந்தநம் |
| ஆறுமாய் | அநுஷ்டேயமான ஆக்நேயாதியாகஷட்கமுமாய் |

| | |
|---|---|
| ஓரைந்தும் | ப்ரதானங்களானதேவயக்ஞ பித்ருயக்ஞபூதயக்ஞ மநுஷ்யயக்ஞ ப்ரமயக்ஞாத்மகபஞ்சமகாயக்ஞங்களாய் |
| ஐந்தும் | பஞ்சாகுதிஸ்வரூபனாய் இம்மூன்றும் ஆராத்யாராதகபாவநிபந்தனம் |
| ஐந்துமாய் | கார்ஹபத்யாஹவநீயதக்ஷிணாக்நிகளும்சவ்யாபசவ்யங்களாகிற விரண்டுமாகவைந்துமாய் இங்கேசரீராத்மபாவநிபந்தனம். |
| ஏறு | அதிசயித்திருக்கிற |
| சீர் | சம்பத்தையுடைய |
| இரண்டும் | க்ஞானவிரக்திகளாகிறவிரண்டுமாய் |
| மூன்றும் | உபாசநாத்மக க்ஞானபலமான வைசுவர்யகைவல்யபகவத்ப்ராப்திகளாகிற மூன்றுமாய்அன்றிக்கே க்ஞானவைராக்யசாத்யமான பரபக்தி பரக்ஞான பரமபக்திகளாகிற மூன்றும் |
| ஏழும் | விவேகாதிசப்தகமாய் |
| ஆறும் | க்ஞாநசக்த்யாதிகளாகிற ஆறுமாய் |
| எட்டுமாய் | சேதநகதாபஹதபாப்மத்வாதிகுணாஷ்டகமாய்இவைஐந்தும் நிர்வாஹ்யநிர்வாஹகபாவநிபந்தனசாமாநாதிகரண்யங்கள் |
| வேறு | பாஹ்யகுதிருஷ்டிகளென்ன |
| வேறுஞானம் | பாஹ்யாகமங்களென்ன |
| ஆகி | இதுகளுக்குப்ரவர்த்தகனாய் இதுவும் பூர்வவத் சாமாநாதிகரண்யம் |
| மெய்யினோடு | முமுக்ஷுக்களுக்குமெய்யனாகையோடே |
| பொய்யுமாய் | ப்ரயோஜநாந்தர பரரானக்ஷுத்ரர்களுக்கு ப்ரயோஜனங்களைக்கொடுத்துத் தானகலவிருக்கையாலே அசத்கல்பனாய் |
| ஊறொடு | ஸ்பர்சத்தோடேகூடின |
| ஓசையாய | சப்தாதிவிஷயங்களாகிற |
| ஐந்துமாய | ஐந்துமாகிய |
| ஆயமாயனே | கோபஸஜாதியனாயவதரித்த ஆச்சர்யபூதனே |

வாக்யசேஷம் காரணபூதனுனவுன்னுலே சிருஷ்டரானசேதநர்க்குகர்மயோகம்முதலாக பரமபக்திபரியந்தமான பகவத்ஸமாராதநத்துக்கும் சுபாசிரயனுகைக்கும் அந்தபரமபக்தியுக்தர்க்கு சர்வவிதபோக்யமாகைக்கும் கிருஷணனுய்வந்துரக்ஷிக்குமுன்னுடைய நீர்மை யார்நினைக்கவல்லரென்று தாத்பர்யம். (௨)

ஐந்துமைந்து மைந்துமாகி யல்லவற்று ளாயுமா
யைந்துமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
ஐந்துமைந்து மைந்துமாகி யந்தரத் தணைந்துநின்
றைந்துமைந்து மாயநின்னை யாவர்காண வல்லரே. (௩)

( இ - ள். )

| | |
|---|---|
| ஐந்தும் | ஆகாசாதிபூதங்களைந்தும் |
| ஐந்தும் | ஞானேந்திரியங்களைந்தும் |
| ஐந்தும் | கர்மேந்திரியங்களைந்தும் |
| ஆகி | ஆய் |
| ஐந்தும் | தன்மாத்திரைகளைந்தும் |
| மூன்றும் | பிரகிருதிமஹதஹங்காரங்களாகிறமூன்றும் |
| ஒன்றும் | மநஸ்ஸும் |
| ஆகி | ஆய் |
| அல்லவற்றுளாயுமாய் | பூர்வோக்தாசேதநமல்லாத சேதநர்க்கு அந்தர்யாமியாய் -அற்று- நிரர்தகாவ்யயம். |
| நின்றவாதிதேவனே | பிரளயத்திலேநின்ற ஆதிகாரணபூதனுன தேவனே லீலாசீலனே |
| ஐந்தும் | அப்பிராகிருதபஞ்சசக்திகளுக்கும் |
| ஐந்தும் | ஞானேந்திரியங்களைந்துக்கும் |
| ஐந்துமாகி | கர்மேந்திரியங்களைந்துக்கு நிர்வாஹகனுய் |
| அந்தரத்து | பரமவியோமமான பரமபதத்திலே |
| அணைந்துநின்று | பொருந்திநின்று |
| ஐந்தும் | சப்தாதிபோக்யங்களைந்தும் |
| ஐந்தும் | போகஸ்தாநமென்ன போகோபகரணமென்ன வைகுந்தத்தமரரும் முனிவருமென்ன இரண்டுகோடியும் முக்தருமென்ன அஞ்சுகோடியும் |
| ஆயநின்னை | ஆகிய உன்னை |

| | |
|---|---|
| யாவர் | ஆர் |
| காணவல்லர் | அறிகைக்குசமர்த்தர் |

உன்கிருபையாலே நீகாட்ட நான்வருத்தமறக்கண்டாற்போலே ஸ்வஸாமர்த்தியேந காணவல்லாரில்லையென்று தாத்பர்யம். ஐந்துமைந்துமைந்துமாகி ஐந்துமூன்றுமொன்றுமாகி யல்லவற்றுளாயுமாய்நின்றவாதிதேவனே ஐந்துமைந்துமைந்துமாகி அந்தரத்தணைந்துநின்றைந்துமைந்துமாயநின்னை யாவர்காணவல்லரோயென்றந்வயம். (ரு)

மூன்றுமுப்ப தாறினோடோ ரைந்துமைந்து மைந்துமாய்
மூன்றுமூர்த்தி யாகிமூன்று மூன்றுமூன்று மூன்றுமாய்த்
தோன்றுசோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்கமா
யேன்றனாவி யுள்புகுந்த தென்கொலோவெ மீசனே. (சு)

( இ - ள். )

| | |
|---|---|
| மூன்றுமுப்பது | முப்பத்துமூன்றுஹல்லுக்களும் |
| ஆறினோடொரைந்து மைந்தும் | அச்சுக்கள்பதினாறும் |
| ஐந்தும் | ஸ்பிரஷ்டமென்கிறளகாரத்தையாதியாகவுடைய அஞ்சக்ஷரங்களும் |
| ஆய் | நிர்வாஹகனாயென்றபடி |
| மூன்றுமூர்த்தியாகி | த்ரைரூபமான ரூபத்ரயத்தையுடையனாய் |
| மூன்றுமூன்றுமூன்று மூன்றுமாய் | நாலுமூன்று பன்னிரண்டாய் திருத்துவாதசாக்ஷரத்துக்குப் பிரதிபாத்யனாய் இங்கேவாச்யவாசகநிபந்தனம் |
| தோன்றுசோதிமூன்றும் | மூன்றுதோன்று சோதியாயென்று கூட்டுவது மூன்றிலே அக்ஷரத்ரயாத்மகமானபிரணவத்திலே |
| தோன்று | பிரதிபாத்யமான |
| சோதியாய் | ஜோதிர்மயனாய் அதவா |
| மூன்றிலே | மூன்றுவேதங்களிலே |
| தோன்று | தோன்றுகிற |
| சோதியாய் | பிரணவாத்மகஜோதி : ப்ரதிபாத்யனாய் |
| துளக்கம் | சலநம் |
| இல் | இல்லாமலிருக்கிற |

| | |
|---|---|
| விளக்கமாய் | பிரகாசகமான அகாரவாச்யனாய் எமீசனே யென்றனாவியுள்புகுந்ததென்கொலோவென் றுகூட்டுவதுஎன்றனென்பதுநீட்டல்விகாரம் |
| எம் | நமக்கு |
| ஈசனே | நிருபாதிகநியந்தாவான சேஷியானவனே |
| என்தன் | என்னுடைய |
| ஆவியுள் | மநஸுக்குள்ளே |
| புகுந்தது | புகுந்து உன்னையுள்ளபடி பிரகாசிப்பித்தது |
| என்கொலோ | என்னநீர்மையோ. (௪) |

நின்றியங்கு மொன்றலா வுருக்கடோறு மாவியா
யொன்றியுள் கலந்துநின்ற நின்னதன்மை யின்னதென்
றென்றும்யார்க்கு மெண்ணிறந்த வாதியாய்நின் னுந்திவா
யன்றுநான் முகற்பயந்த வாதிதேவ னல்லையே. (௫)

( இ - ள். )

| | |
|---|---|
| நின்று | ஸ்தாவரமாய் |
| இயங்கும் | ஜங்கமமாய் |
| ஒன்றலா | ஸ்வோஜீஜவநோபயோகியன்றியிலேயிருக்கிற அன்றிக்கே |
| ஒன்றலா | ஏகவிதமன்றியிலேயிருக்கிற |
| உருக்கள்தோறும் | சரீரங்கள்தோறும் |
| ஆவியாய் | ஆத்மாவாய் |
| ஒன்றி | பொருந்தி |
| உள்கலந்து | பரிசமாப்ய |
| உள் | உள்ளே |
| கலந்து | கூடி |
| நின்ற | வர்த்திக்கிற |
| நின்ன | உன்னுடைய |
| தன்மை | ஸ்வபாவம் |
| இன்னதென்று | ஏவம்விதமென்று இப்படிப்பட்டதென்று |
| என்றும் | காலத்ரயத்திலும் |
| யார்க்கும் | எப்படிப்பட்டஞாநிகளுக்கும் |
| எண்ணிறந்த | சிந்தாவிஷயமன்றியிலேயிருக்கிற |
| ஆதியாய் | பிரதானனானவனே |
| நின் | உன்னுடைய |

| | |
|---|---|
| உந்திவாய் | திருவுந்தியினிடத்திலே |
| அன்று | பிரளயகாலத்திலே |
| நான்முகன் | சதுர்முகனை |
| பயந்த | பெற்ற |
| ஆதி | ஜகத்காரணனான |
| தேவனல்லையே | லீலாசீலன்ன்றோ நின்னையாவர்காணவல்லரோயென்றுஅநுஷங்கம். (௫) |

நாகமேந்து மேருவெற்பை நாகமேந்து மண்ணினை
நாகமேந்து மாகமாக மாகமேந்து வார்புனல்
மாகமேந்து மங்குறீயோர் வாயுவைந்து மைந்துகாத்
தேகமேந்தி நின்றநீர்மை நின்கணே யியன்றதே. (௬)

( இ - ள். )

நாகமேந்தித்யாதி

| | |
|---|---|
| நாகம் | ஸ்வர்க்கத்தை |
| ஏந்து | தரிக்கிற |
| மேரு | மஹாமேருவென்கிற |
| வெற்பை | பர்வதத்தை |
| நாகம் | திக்கஜங்களாலே |
| ஏந்து | தரிக்கப்பட்ட அங்ஙனன்றிக்கே |
| நாகம் | திருவநந்தாழ்வானாலே ஏந்து தரிக்கப்பட்ட |
| மண்ணினை | பூமியை |
| நாகம் | ஸுகத்தாலே கம்சுகமாய் அகம்என்று துக்கமாய் நாகமென்றுசுகமாய் ஸுகத்தாலென்றர்த்தம். |
| ஏந்து | தாங்காநின்றுள்ள நிர்ப்பாரமாயிராநின்றுள்ளவென்றபடி |
| மாக | மகாகாசமான பரமபதமென்ன கம்மென்றுகாசம் அன்றிக்கே நாகமேந்துமாகவென்றுசம்புத்தியாய் |
| நாகம் | திருவநந்தாழ்வானாலே |
| ஏந்தும் | தரிக்கப்பட்ட |
| ஆக | திருமேனியையுடையவனே யென்றர்த்தமுமாம். |

மாகமாகமேந்துவார்புனல்

| | |
|---|---|
| மாகம் | பரமபதமென்ன |
| மாகம் | ஆகாசத்தாலே |
| ஏந்து | தரிக்கபபட்ட |
| வார் | பிரவாஹரூபமான |
| புனல் | கங்கையென்ன இவையும் |

மாகமேந்துமங்குல்

| | |
|---|---|
| மாகம் | ஆகாசத்தாலே |
| ஏந்து | தரிக்கப்பட்ட |
| மங்குல் | மேகமென்ன |
| தீயோர் | ஓர் தீ வைசுவாநராக்நியும் |
| வாயுவைந்து | பஞ்சவிர்த்திபிராணன்களையும் |
| அமைந்து | ரக்ஷணதர்மத்திலேசமைந்து |
| காத்து | ரக்ஷித்து |

வாயுவைந்துமைந்துகாதநென்று பாடமானபோது தசதாவிபக்த்மானவாயுவென்றர்த்தம்

| | |
|---|---|
| ஏகம் | ஒருவஸ்து |
| ஏந்தி | தரித்து |
| நின்ற | வர்த்திக்கிற |
| நீர்மை | ஸ்வபாவம் |
| நின்கணே | உன்பக்கலிலே |
| இயன்றதே | வர்த்திக்கிறதேயென்னுதல் வளர்கிறதேயென்னுதல் |

இங்கேயும்யாவர்காணவல்லரோயென்று அநுஷங்கம்.மாகமேந்து மாகத்தையுடையவனேயென்று தொடங்கியந்வயம். (அ)

ஒன்றிரண்டு மூர்த்தியா யுறக்கமோ டுணர்ச்சியா
யொன்றிரண்டு காலமாகி வேலைஞால மாயினா
யொன்றிரண்டு தீயுமாகி யாயனாய மாயனே
யொன்றிரண்டு கண்ணினனு முன்னையேத்த வல்லனே. (எ)

( இ - ள். )

ஒன்றிரண்டுமூர்த்தியித்யாதி

| | |
|---|---|
| ஒன்று | பிரதானமானவொருமூர்த்தியென்ன |
| இரண்டுமூர்த்தியாய் | அப்பிரதானங்களான பிரம்ஹருத்ராத்மகமான இரண்டுமூர்த்தியென்னஇவையுடையனாய் |

| | |
|---|---|
| உறக்கமோடுணர்ச்சியாய் | |
| உறக்கமோடு | அஞ்ஞானமாகிற நித்ரையோடு |
| உணர்ச்சியாய் | ஞானமாய் நிர்வாஹகனுயென்றபடி |
| ஒன்றிரண்டுகாலமாகி | சத்வரஜஸ்தம் உத்ரோக்காலத்ரய நிர்வாஹ கனுய் |
| வேலை | சமுத்திரத்தினுலேசூழ்ந்த |
| ஞாலமாயினுய் | பூமிக்குநிர்வாஹகனுய் |
| ஒன்றிரண்டுதீயுமாகி | ஆஹவநீய கார்ஹபத்ய தக்ஷிணுக்நிகளுக்கு நிர்வாஹகனுய் |
| ஆயனுய | கோபஸஜாதீயனுயவதரித்த |
| மாயனே | ஆச்சர்யபூதனே |
| ஒன்றிரண்டுகண்ணினுனும் | ஞாநாத்யக்ஷனுன திரிநேத்ரனும் |
| உன்னை | யேத்தவல்லனே |
| உன்னை | உன்படி |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ண |
| வல்லனே | சமர்த்தனேவென்றர்த்தம். (எ) |

ஆதியான வானவர்க்கு மண்டமாய வப்புறத்
தாதியான வானவர்க்கு மாதியான வாதிநீ
யாதியான வானவாண ரந்தகால நீயுணாத்
தியாதியான காலநின்னை யாவர்காண வல்லரே. (அ)

(இ - ள்.)

| | |
|---|---|
| ஆதியானவித்யாதி | |
| ஆதியான | ஜகத்ஸ்ருஷ்டியாதிகர்த்தாக்களான |
| வானவர்க்கும் | பிரம்ஹாதிதேவதைகளுக்கும் |
| அண்டமாய | அண்டசப்தவாச்யமானலீலாவிபூதிக்கு |
| அப்புறத்து | அப்பாற்பட்டபரமபதத்திலேவர்த்திக்கிற |
| ஆதியான | ஜகத்காரணங்களான |
| வானவர்க்கும் | நித்யசூரிகளுக்கும் அன்றிக்கே ஆதியான பூர்வரானவென்றுமாம் |
| ஆதியான | நிர்வாஹகனுன |
| ஆதிநீ | பிரதானபூதனீ |
| ஆதியான | ஜகத்சிருஷ்டாக்களான |
| வான | ஊர்த்வலோகங்களுக்கு |
| வாணர் | அத்யக்ஷரான ப்ரம்ஹாதிகளுடைய |

| | |
|---|---|
| அந்தகால | அவ்வவ்காலத்துக்குசியாமகனாய் |
| நீயுரைத்தி | நீயருளிச்செய்தாய் |
| ஆதியானகால | ப்ரளயகாலத்துக்கு நிர்வாஹசனான |
| நின்னை | உன்னை |
| யாவர்காணவல்லர் | காணவல்லார்யாவரொன்றுகூட்டுவது. (அ) |

தாதுலாவு கொன்றைமாலை துன்னுசெஞ் சடைச்சிவ
னீதியால் வணங்குபாத நின்மலா நிலாயசீர்
வேதவாணர் கீதவேள்வி நீதியான கேள்வியார்
நீதியால் வணங்குகின்ற நீர்மைநின்க ணின்றதே. (௯)

( இ - ள். )

தாதுலாவித்யாதி

| | |
|---|---|
| தாது | கேசரங்களாலே |
| உலாவு | மிகைத்திருக்கிற அலைகிற |
| கொன்றைமாலை | கொன்றையினுடைய பூமாலையை |
| துன்னு | நெருங்கினதாய் |
| செம் | சிவந்த |
| சடை | ஜடையிலேயுடையனான |
| சிவன் | ருத்ரன் |
| நீதியால் | வேதோக்தவிதியாலே |
| வணங்கு | ஆசிரயிக்கப்பட்ட |
| பாத | திருவடிகளையுடையவனே |
| நின்மலா | நிர்மலனே |
| நிலாய | வர்த்தியாநின்றுள்ள |
| சீர் | அமாநித்வாதிகல்யாணகுணங்களையுடைய அன்றிக்கே வேதத்துக்கு விசேஷணமாய் சீரென்று அபௌருஷேயத்வாதி குணங்களென்றுதல் ப்ரதிபாத்யகல்யாணகுணங்களையாதலுடையதென்றும் |
| வேதவாணர் | வேதநிர்வாஹகரானவைதிகாக்ரேசரர் |
| கீத | சாமகீதப்ரசுரமான |
| வேள்விநீதியான | யாகங்களுக்கடியான வேதோக்தப்ரகாரமான |
| கேள்வியார் | சிரவணத்தினையுடையவர்கள் |

நீதியால் வேதோக்தப்ரகாரத்தாலே
வணங்குகின்ற உபாசிக்கிற
நீர்மை உபாஸ்யதஸ்வபாவம்
நின்கணின்றதே ஏகாரம்பிரித்து நின்கணேநின்றதேயென்று
ய்உன்பக்கலிலே வர்த்திக்கிறதென்றர்த்தம்.

தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண் டடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோ
னின்னுளே பிறந்திறந்து நிற்பவுந் திரிபவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின்க ணின்றதே. (௰)

( இ - ள். )

தன்னுளேயித்யாதி
தன்னுளே தன்னிலே
திரைத்து கிளர்ந்து
எழும் சஞ்சரியாநின்றுள்ள
தரங்கம் அலைகளையுடைய
வெண் அபாஸ்வரசுக்லமான வெளுத்து
தடம் ப்ரதேசத்தையுடைய
கடல் சமுத்திரமானது
தன்னுளே தன்னிலே
திரைத்து கிளர்ந்து
எழுந்து ஸஞ்சரித்து
அடங்குகின்ற உபஸம்ஹரிக்கிற
தன்மைபோல ஸ்வபாவம்போல
நின்னுளே உன்ஸ்வரூபத்துக்குள்ளே
பிறந்து உத்பந்நமாய்
இறந்து விநாசியாய்ப்போருகிற
நிற்பவும் ஸ்தாவரமென்ன
திரிபவும் ஜங்கமமென்னததாத்மகமான சகலப்ரபஞ்
சமென்றபடி
நின்னுளே உன்பக்கலிலே
அடங்குகின்ற உபஸம்ஹரிக்கிற
நீர்மை ஸ்வபாவம்
நின்கண் உன்பக்கலிலே

நின்றதே — வர்த்திக்கிறதே முதற்பாட்டிலே உபக்ராந்தமானஜகதுபாதாநத்வத்தைப் பத்தாம்பாட்டிலே உபஸம்ஹரித்துத் தலைக்கட்டினாராய்விட்டது. (௰)

சொல்லினாற் றொடர்ச்சிநீ சொலப்படும் பொருளுநீ
சொல்லினாற் சொலப்படாது தோன்றுகின்ற சோதிநீ
சொல்லினாற் படைக்கநீ படைக்கவந்து தோன்றினாய்
சொல்லினாற் சுருங்கநின் குணங்கள்சொல்ல வல்லரோ. (௰க)

( இ - ள். )

சொல்லினாலித்யாதி.

சொல்லினால் — வேதத்தாலேஸித்தமானபுருஷார்த்தத்திலே
தொடர்ச்சிநீ — உறவு ருசியென்றபடி நிர்வாஹகன் நீயென்றுசாமாநாதிகரண்யத்துக்கர்த்தம்
சொலப்படும் — சுருதிஸ்மிருதிகளிலே ஆசிரயணீயராகத் தோன்றுகிற
பொருளுநீ — பதார்த்தமான தேவதைகளுக்காத்மாவுநீ
சொல்லினால் — வேதாந்தத்தால்
சொலப்படாது — பரிச்சேதித்துச்சொல்லப்படாதென்று
தோன்றுகின்ற — அவிக்ஞாதம்விக்ஞாநதாவித்யாதிகளிலே தோன்றுகின்ற
சோதிநீ — பரஞ்சோதிசப்தவாச்யன்நீ
சொல்லினால் — தஸ்மைவேதாந பிரஹிணோதியென்றுநீ கொடுத்தவேதத்தாலே
படைக்க — ஜகத்சிருஷ்டிபண்ணுவாராக
நீபடைக்க — பிரம்ஹாணவிதயாதியென்று நீசிருஷ்டிக்க
வந்துதோன்றினார் — உன்நாபீகமலத்திலே வந்துதோன்றினப்ரம்ஹாமுதலானபேர்கள்
சொல்லினால் — ஒரோர்ப்ரயோஜநங்களாலே
சுருங்க — சம்க்ஷேபண
நின்குணங்கள் — உன்னுடைய பரத்வாதிசாதகாதிகுணங்களை
சொல்லவல்லரோ — பேசவும்சமர்த்தரோ. (௰க)

உலகுதன்னை நீபடைத்தி யுள்ளொடுக்கி வைத்திமீண்
டுலகுதன்னு ளேபிறத்தி யோரிடத்தை யல்லையா
லுலகுநின்னொ டொன்றிநிற்க வேறுநிற்றி யாதலா
லுலகுநின்னை யுள்ளசூழல் யாவருள்ள வல்லரே. (௰௨)

( இ - ள். )

உலகித்யாதி

| | |
|---|---|
| உலகுதன்னை | லோகத்தை |
| நீபடைத்தி | நீயேசிருஷ்டியாநின்றி |
| உள் | வயிற்றிலே |
| ஒடுக்கி | சங்குசிப்பித்து |
| வைத்தி | வையாநின்றி |
| மீண்டு | காரணத்வப்ரயுக்தவைபவத்தினின்றுநிவிர்த்தனுய் அன்றிக்கே |
| மீண்டு | திரியட்டுமென்றுமாம் |
| உலகுதன்னுளே | லோகத்துக்குள்ளே |
| பிறத்தி | அவதரியாநின்ருய் |
| ஓரிடத்தையல்லையால் | ஒருஸ்தலத்தை யுடையவனென்று நிர்ணயிக்கவொண்ணுதவனுகையாலே |
| உலகு | ப்ரபஞ்சமானது |
| நின்னொடு | சரீரியான்வுன்னோடு |
| ஒன்றி | சரீரனுய் |
| நிற்க | வர்த்திக்க |
| வேறுநிற்றிஆதலால் | சுபாசிரயமாகைக்கு அசாதாரண விக்ரகயுக்தனுய்க்கொண்டு வ்யாவிர்த்தனுயிராநின்றி |
| ஆதலால் | ஒருவகையாலும் பரிச்சேதிக்கவொண்ணுமையாலே |
| உலகு | லோகத்திலே |
| சூழலுள்ளநின்னை | ஆச்சர்யமானபடிகளையுடையவுன்னை |
| யாவர் | யார் |
| உள்ள | அறிய |
| வல்லர் | சமர்த்தர் சக்தர். (௰௨) |

இன்னையென்று சொல்லலாவ தில்லையாது மிட்டிடைப்
பின்னைகேள்வ னென்பருன் பிணக்குணர்ந்த பெற்றியோர்
பின்னையாய கோலமோடு பேருமூரு மாதியு
மின்னையார் நினைக்கவல்லர் நீர்மையா னினைக்கிலே. (௰௩)

( இ - ள். )

இன்னையென்றித்யாதி.

| | |
|---|---|
| இன்னையென்று | அஜஹத்ஸ்வபாவாதிகோடியில் ஏவம் விதமென்று |
| சொல்லலாவது | சொல்லுகிறதுக்குத்தக்கது |
| யாதுமில்லை | ஒன்றுமில்லை |
| இட்டு | நேரிய |
| இடை | மத்யத்தையுடைய அதவா-யாதுமிட்டென்றுகூட்டி |
| யாதும் | அல்லாத சுபாசிரயங்களையடையவிட்டு |
| இடை | கோபஸஜாதியையாய்வந்தவதரித்த |
| பின்னை | நீளாதேவியான நப்பின்னைக்கு |
| கேள்வனென்பர் | வல்லபனென்றுசொல்லுவார்கள் |
| உன்பிணக்கு | உன்னுடைய அவதாரநாமசேஷ்டிதவிஷயமானஅநர்சிருதர்களுடையவிவாதத்தை |
| உணர்ந்த | அறிந்த |
| பெற்றியோர் | பண்டிதர்கள் இதரஸஜாதியனா யவதரித்து நிற்கச்செய்தே |
| ஆய | விலக்ஷணமான் |
| கோலமோடு | விக்ரகத்தோடு |
| பேரும் | திருநாமங்களென்ன |
| ஊரும் | அவதரித்ததேசப்ரபாவமென்ன |
| ஆதியும் | அவ்வவதாரவிக்ரகத்துக்கு நிதானமென்ன இவற்றையுமுடைய வுன்னை-அதவா |
| பின்னை | அவதாரஸமாப்தியில் |
| ஆய | விசிரமஸ்தலமான |
| கோலமோடு | வியூகவிக்ரகங்களோடுகூடிய |
| பேரும் | அக்குணசேஷ்டிதங்களுக்குவாசகங்களானதிருநாமங்களென்ன [ன |
| ஊரும் | அவ்வியூகஸ்தலங்களானஆமோகாதிகளென் |

| | |
|---|---|
| ஆதியும் | இவற்றுக்கடியானபரத்வமென்ன இவற்றை யுடைய |
| நின்னை | உன்னை—நீர்மையாலே நினைக்கிலல்லது ஆர் நினைக்கவல்லரென்று கூட்டி |
| நீர்மையால் | உன்சௌலப்பியத்தாலே |
| நினைக்கிலல்லது | அறியுமத்தனையொழிய |
| யார் | ஆர் |
| நினைக்கவல்லர் | ஸ்வஸாமர்த்தியத்தாலே அறியசக்தரென்று அத்தியாஹாரலப்தம். (௰௩) |

தூய்மையோக மாயினாய் துழாயலங்கன் மாலையா
யாமையாகி யாழ்கடற் றுயின்றவாதி தேவநின்
னாமதேய மின்னதென்ன வல்லமல்ல மாயினுஞ்
சாமவேத கீதனாய சக்கிரபாணி யல்லையே. (௰௪)

( இ - ள். )

தூய்மையித்யாதி.

| | |
|---|---|
| தூய்மை | ஸம்ஸாரிசுத்தியினுடைய |
| யோகமாயினாய் | யோகநிர்வாஹகனானவனே |
| துழாய் | திருத்துழாயினுடைய |
| அலங்கல் | இதழ்களாலேசமைத்த |
| மாலையாய் | மாலையையுடையவனே |
| ஆமையாகி | கூர்மரூபியாய் |
| ஆழ் | கம்பீரமான |
| கடல் | சமுத்திரத்திலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளுகிற |
| ஆதி | காரணபூதனான |
| தேவ | அந்தகாரணத்வத்தைத்யோதிப்பிக்கிறவனே தீவு கிரீடாத்யுதியிறே அன்றிக்கே ஆதியென்று பாவப்ரதானமாய் ஆதித்வத்தை காரணத்வத்தையென்றாகவுமாம் |
| நின் | கூர்மரூபியானதேவருடைய |
| நாமதேயம் | திருநாமங்களுக்கு வாச்யமானகுணசேஷ்டிதங்கள் |
| இன்னதென்ன | ஏவம்விதமென்று பரிச்சேதித்துச்சொல்லுதற்கு |

| | |
|---|---|
| வல்லம் | சாமர்த்தியத்தையுடையோம் |
| அல்லமாயிலும் | அன்றாகிலும் நான் அசமர்த்தனாகிலுமென்றபடி |
| சாமவேத | சாந்தோக்யத்திலே |
| கீதனாய | ப்ரதிபாதிதனான |
| சக்கிரபாணியல்லையே | சங்கசக்ரனான ஆதித்யாந்தர்வர்த்தியன்றோ. |

அங்கமாறும் வேதநான்கு மாகிநின்ற வற்றுளே
தங்குகின்ற தன்மையாய் தடங்கடற் பணத்தலைச்
செங்கணா கணைக்கிடந்த செல்வமல்கு சீரினாய்
சங்கவண்ண மன்னமேனிச் சார்ங்கபாணி யல்லையே. (௰௫)

( இ - ள். )

அங்கமாறுமித்யாதி.

| | |
|---|---|
| அங்கம் | சிக்ஷாத்யங்கங்களினுடைய |
| ஆறும் | ஷட்கமென்ன |
| வேதநான்கும் | அங்கியான வேதசதுஷ்டயமென்ன இவற்றுக்கு நிர்வாஹகனானவனே ஆகிநின்றவற்றுளென்றுகூட்டி |
| ஆகி | நிர்தோஷப்பிரமாணமாய் |
| நின்றவற்றுள்ளே | வர்த்திக்கிற அந்தவேதங்களினுள்ளே |
| தங்குகின்றதன்மையாய் | |
| தங்குகின்ற | பிரமேயமாய்வர்த்திக்கிற |
| தன்மையாய் | சத்யத்வக்ஞாநத்வாதிஸ்வபாவங்களையுடையவனே |
| தடம் | இடமுடைத்தான் |
| கடல் | க்ஷீரசாகரத்திலே |
| பணம் | பணங்களுடைய |
| தலை | அக்ரத்திலேயிருக்கிற |
| செம் | சிவந்த |
| கண் | திருக்கண்களையுடையனான |
| நாகணை | திருவநந்தாழ்வானாகிறபடுக்கையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மல்கு | நிரவதிகமான |
| செல்வம் | ஐசுவர்யமென்ன |

| | |
|---|---|
| சீரனாய் | கல்யாணகுணங்களென்ன இவற்றையுடையவனே |
| சங்கம் | சங்கத்தினுடைய |
| வண்ணமன்ன | வர்ணம்போலேயிருக்கிற |
| மேனி | திருமேனியையுடைத்தாய் |
| சார்ங்கபாணியல்லையே | பின்புக்ஷத்ரியகுலத்திலேவந்தவதரித்து ஸ்ரீசார்ங்கத்தைத்தரித்தவனல்லையோ இப்படிப்பட்ட வுன்னுடைய நீர்மையைப்பரிச்சேதித்தறியவல்லராரொன்றுவாக்யசேஷம். () |

தலைக்கணத் துகட்குழம்பு சாதிசோதி தோற்றமாய்
நிலைக்கணங்கள் காணவந்து நிற்றியேலு நீடிருங்
கலைக்கணங்கள் சொற்பொருள் கருத்தினா னினைக்கொணா
மலைக்கணங்கள் போலுணர்த்து மாட்சிநின்றன் மாட்சியே. ()

( இ - ள். )

தலைக்கணத்தித்யாதி.

| | |
|---|---|
| தலைக்கணம் | பிரதமமான தேவகணமென்ன |
| துகள் | க்ஷுத்ரமான ஸ்தாவரமென்ன |
| குழம்புசாதி | மிசிரயோநிகளான மநுஷ்யதிரியக்குகளென்னஇவற்றிலே |
| சோதி | அப்பிராகிருதஜோதிர்மயவிக்கிரகத்தோடே |
| தோற்றமாய் | அவதரித்து |
| நிலைக்கணங்கள் | ஸ்தாவரங்கள் |
| காணவந்து | அநுபவிக்கும்படிவந்து |
| நிற்றியேலும் | நின்றாலும் |
| நீடு | நித்யமாய் |
| இரும் | விஸ்திருதமான |
| கலை | வேதவேதாங்கங்களினுடைய |
| கணங்கள் | சமூகங்கள் |
| சொல் | பதத்தினுடைய |
| பொருள் | அர்த்தமென்ன |
| சொற்பொருள் | பதார்த்தங்கள் |
| கருத்தினால் | தாத்பரியமென்னஇவற்றாலே |
| நினைக்கொணா | நினைக்கவொண்ணாது. ஆகையாலே |

| | |
|---|---|
| ஶைலக்கணங்கள்போல் | பர்வதசமூகங்கள்போலே அபேத்யமாய் அபரிச்சின்னமான |
| நின்றன்மாட்சியே | உன்னுடைய வவதாரவைலக்ஷண்யத்தினுடையபெருமையே |
| மாட்சியுணர்த்தும் | வைலக்ஷண்யமென்றறிவிக்கப்படும் பரிச்சேதிக்கப்படுமதன்று. (௰சு) |

ஏகமூர்த்தி மூன்றுமூர்த்தி நாலுமூர்த்தி நன்மைசேர்
போகமூர்த்தி புண்ணியத்தின் மூர்த்தியெண்ணின்மூர்த்தியாய்
நாகமூர்த்தி சயனமாய் நலங்கடற் கிடந்துமே
லாகமூர்த்தி யாயவண்ண மென்கொலாதி தேவனே. (௰எ)

( இ - ள். )

ஏகமூர்த்தியித்யாதி

| | |
|---|---|
| ஏகமூர்த்தி | பரவாசுதேவவிக்ரஹனாய் |
| மூன்றுமூர்த்தி | சங்கருஷணாதிவ்யூகத்ரயரூபமான மூன்று மூர்த்திகளையுடையனாய் |
| நாலுமூர்த்தி | பராவஸ்தையும் வ்யூகங்களோடேகூட்டிநாலுமூர்த்தியாய் அன்றிக்கேப்ரதானபுருஷாவ்யக்தகாலங்களாகிற மூர்த்திசதுஷ்டயயுக்தனாயென்றாகவுமாம் |
| நன்மைசேர் | அனுக்கிரகபிராசுர்யமாகிற நன்மையோடேகூடின |
| போகம் | போக்கியமாயிருக்கிற |
| மூர்த்தி | விபவமூர்த்தியையுடையவனாய் அன்றிக்கே |
| நன்மை | ஆமுஷ்மிகத்தில்நித்யானுபவமாகிறநன்மையோடே |
| சேர் | கூடியிருக்கிற |
| போகம் | ஜகத்தில்போக்கியமாயிருக்கிறவென்றுமாம் |
| புண்ணியத்தின் | பாக்யாதிகருடைய சுகிர்தபரிபாகத்தின் பலமான |
| மூர்த்தி | அந்தவிபவமூர்த்தியையுடைத்தாய் |
| எண்ணில் | சங்கியாசூன்யமான |
| மூர்த்தியாய் | அந்தவிபவஸஜாதீயமான மூர்த்திகளையுடையனாய் நாகமூர்த்தியித்யாதி நலங்கடலிலே நாகமூர்த்திசயனமாய்க் கிடந்தென்று கூட்டுவது |

| | |
|---|---|
| நலம் | பிரளயாவதிகாலஸ்தானமாகிறநன்மையை யுடைய |
| கடல் | க்ஷீரார்ணவத்திலே |
| நாகம் | திருவனந்தாழ்வானுடைய |
| மூர்த்தி | திருமேனியாகிற |
| சயனமாய் | படுக்கையையுடையவனாய் |
| கிடந்து | கண்வளர்ந்தருளி |
| மேல் | ததனந்தரம் |
| ஆக | ஆசிருதருக்ந்ததிரவியமாகிற |
| மூர்த்தியாய | அர்ச்சாவதாரமாயவ்தரித்த |
| வண்ணம் | ஸ்வபாவம் |
| என்கொல் | என்னயிருக்கிறது |
| ஆதிதேவனே | காரணபூதனானசேஷியானவனே. (௰௭) |

விடத்தவாயொ ராயிரம் மிராயிரங்கண் வெந்தழல்
விடுத்துவீழ் விலாதபோக மிக்கசோதி தொக்கசீர்
தொடுத்துமேல் விதானமாய பவ்வநீர ராவணைப்
படுத்தபாயல் பள்ளிகொள்வ தென்கொல்வேலை வண்ணனே. ()

( இ - ள். )

| | |
|---|---|
| விடத்தித்யாதி | |
| விடத்த | விஷத்தையுடைத்தான |
| வாயொராயிரம் | ஆயிரம்வாயையுடைய |
| இராயிரங்கண் | இரண்டாயிரங்கண்ணாலே |
| வெம் | குரூரமான |
| தழல் | விஷாக்னியை |
| விடுத்து | புறப்படவிட்டு |
| வீழ்வு | பகவத்விசிலேஷம் |
| இலாத | இல்லாத |
| போகம் | போகத்தையுடைய போகம் அஹே:காய: |
| மிக்க | அதிகமான |
| சோதி | தேஜஸையுடைய தொக்கசீரித்யாதி விதான மாய்மேல் தொக்கசீர்தொடுத்தென்றுகூட்டுவது |
| விதானமாய | விதானாத்மகமானபணங்களுடையமேல் |
| மேல் | உயரிதேசத்திலே |

| | |
|---|---|
| தொக்க | திரளாயிருக்கிற |
| சீர் | அழகை |
| தொடுத்து | க்ரஸித்து பவ்வநீரித்யாதி பவ்வநீர்ப்படுத்த அராவணைப்பாயலென்றுகூட்டுவது |
| பவ்வநீர் | சமுத்ரஜலத்திலே |
| படுத்த | படுக்கப்பட்ட |
| அராவணை | திருவனந்தாழ்வானுகிற |
| பாயல் | படுக்கையிலே |
| பள்ளிகொள்வது | கண்வளர்ந்தருளுகிறவிது |
| என்கொல் | என்னே |
| வேலை | சமுத்ரஜலம்போலிருக்கிற |
| வண்ணனே | வர்ணத்தையுடையவனே. (யஅ) |

புள்ளதாகி வேதநான்கு மோதினாய தன்றியும்
புள்ளின்வாய் பிளந்துபுட் கொடிப்பிடித்த பின்னரும்
புள்ளையூர்தி யாதலால தென்கொன்மின்கொ ணேமியாய்
புள்ளின்மெய்ப் பகைக்கடல் கிடத்தல் காதலித்ததே. (யகூ)

( இ - ள். )

புள்ளதாகியித்யாதி

இப்பாட்டில் வாக்யத்வயம் அதிலே புள்ளின்வாய்பிளந்து அதன்றியும் புள்கொடிபிடித்த பின்னரும் புள்ளையூர்திமின்கொள்நேமியாய் ஆதலால் புள்ளதாகி வேதநான்குமோதினாயென்றுப்ரதமம் அநந்தரம் கடல்புள்ளின்பகைமெய்காதலித்துக்கிடத்தலதென்று த்விதீயவாக்யம்.

| | |
|---|---|
| புள்ளின் | பகாசுரனுகிறபக்ஷியினுடைய |
| வாய் | மூக்கை |
| பிளந்து | பேதித்து |
| அதன்றியும் | அவ்வளவன்றிக்கே |
| புள் | பெரியதிருவடியை |
| கொடி | த்வஜத்திலே |
| பிடித்த | அங்கீகரித்த |
| பிடித்தபின் | பிடித்தஅளவன்றிக்கே |
| பின் | பிற்பாடு |
| அரும் | அநந்யசுலபனான அர்வாசினதேவர்களுக்கு அசக்யனென்றபடி |

| | |
|---|---|
| புள்ளை | பெரியதிருவடியை |
| ஊர்தி | வாகனமாகநடத்தாநின்றாய் |
| மின் | தேஜஸை |
| கொள் | ஸ்வீகரியாநின்ற |
| நேமியாய் | திருவாழியாழ்வானையுடையவனே |
| ஆதலால் | இப்படிநிருபாதிகரக்ஷகனாகையாலே |
| புள்ளதாகி | ஹம்ஸாவதாரத்தைப்பண்ணி |
| வேதநான்கும் | நாலுவேதத்தையும் |
| ஓதினாய் | உபதேசித்தாய் |
| கடல் | திருப்பாற்கடலிலே |
| புள்ளின் | பெரியதிருவடிக்கு |
| பகைமெய் | சகஜசத்ருவாய்த்தோற்றுகிற திருவனந்தாழ்வான்மேலே |
| காதலித்து | அவர்களை அந்யோந்யாநுரக்தராக்கி அடிமைசெய்யும்படி பண்ணிக்கொண்டு |
| கிடத்தலதென்கொல் | கண்வளர்ந்தருளுகிறவதென்னே. (௰௧) |

கூசமொன்று மின்றிமாசு ணம்படுத்து வேலைநீர்
பேசநின்ற தேவர்வந்து பாடமுன் கிடந்ததும்
பாசநின்ற நீரில்வாழு மாமையான கேசவா
வேசவன்று நீகிடந்த வாறுகூறு தேறவே. (உ௰)

(இ - ள்.)

கூசமித்யாதி

| | |
|---|---|
| கூசம் | ஆராலென்வருகிறதோவென்கிறகூச்சம் |
| ஒன்றும் | ஏகதேசமும் |
| இன்றி | இல்லாமல் |
| மாசுணம் | திருவநந்தாழ்வானை |
| படுத்து | விரித்து |
| வேலை | சமுத்திரத்தினுடைய |
| நீர் | ஜலம் |
| பேச | வாய்விட்டுக் கூப்பிடுவாரைப்போலே கோஷிக்கஅன்றிக்கேவேலைநீர்மாசுணம்படுத்தென்றுகூட்டி பேசநின்றவென்று கூட்டுவது |
| பேச | ஸ்தோத்ரம்பண்ணுகைக்காக |

| | |
|---|---|
| நின்ற | பூர்வாந்வயபக்ஷத்திலே ஜகத்ரக்ஷணத்திலேவ்யவஹிதரான |
| தேவர் | ப்ரம்ஹாதிகள் |
| வந்து | ஊர்த்வலோகங்களினின்றும்வந்து |
| பாட | ஸ்தோத்ரம்பண்ணும்படி |
| முன் | சிருஷ்டிகாலந்தொடங்கி |
| கிடந்ததும் | கண்வளர்ந்தருளுகிறபிரகாரமும் |
| பாசம் | பாசங்கள் |
| நின்ற | நிற்கிற |
| நீரில் | சமுத்ரஜலத்திலென்றுமாம் |
| வாழும் | ஹ்ருஷ்டனான |
| ஆமையான | கூர்மஸ்ஜாதியனாயவதரித்த |
| கேசவா | ப்ரம்ஹருத்ரோத்பாதகனே |
| ஏச | உன்படியறியாதாரேசும்படி |
| அன்று | தேவதைகள்சாபேக்ஷராய்நின்றஅன்று |
| நீகிடந்தவாறு | நீமந்தரம் முதுகிலேசுழலக்கண்வளர்ந்தருளுகிறப்ரகாரத்தை |
| தேற | தெரியும்படி |
| கூறு | அருளிச்செய்யவேணும் கூசமொன்றுமின்றியென்றுகூட்டவுமாம் |
| கூசமொன்றுமின்றி | அதிகாரிவிரகத்தால்வந்தகூசமேதுமில்லாமல் |
| கூறு | அருளிச்செய்யவேணும். (௨௰) |

அரங்கனே தரங்கநீர் கலங்கவன்று குன்றுசூழ்
மரங்கடேய மாநிலங்கு லுங்கமாசு ணஞ்சுலாஅய்
நெருங்கநீ கடைந்தபோது நின்றசூர ரென்செய்தார்
குரங்கையாளு கந்தவெந்தை கூறுதேற வேறிதே. (௨௧)

( இ - ள். )

அரங்கனித்யாதி அரங்கனேயென்கிற சம்போதனம் வாக்யாந்தக்ரியையோடேகூட்டுவது.

| | |
|---|---|
| தரங்கம் | அலைகளையுடைத்தான |
| நீர் | சமுத்திரமானது |
| கலங்க | க்ஷோப்தமாக |
| குன்று | மந்தரபர்வதத்தை |

| | |
|---|---|
| சூழ் | சூழ்ந்த |
| மரங்கள் | வ்ருக்ஷங்கள் |
| தேய | வாசுகிஸம்கடனத்தாலேயுளாய |
| மா | மஹத்தான |
| நிலம் | புஷ்கரத்வீபபூமி |
| குலுங்க | அசைய மாசுணமித்யாதி நெருங்கமாசுணஞ்சுலாயென்றுகூட்டி |
| நெருங்க | நெருங்கும்படி |
| மாசுணம் | வாசுகியை |
| சுலாய் | சுற்றியென்றபடி |
| நீகடைந்தபோது | நீஅமிர்தமதனம்பண்ணினபோது அன்று என்றுபிரதமபாதியை யிங்கேகூட்டுவது |
| அன்று | துர்வாசசாபத்திலுலே நஷ்டஶ்ரீகரரான தேவதைகள் கைவாங்கிநின்றஅன்று |
| நின்றசூரர் | நின்றதேவர்கள் சுரரொன்பது சூரரெனநீட்டிக்கிடக்கிறது |
| என்செய்தார் | மந்தராதிஷ்டானத்வாதிகளிலே எத்தைச்செய்தார் |
| குரங்கை | வானரங்களை |
| ஆளுகந்த | ஜயசீலரொன்றுதரித்த |
| எந்தை | என்னுதனே |
| அரங்கனே | திருவரங்கத்தாய் |
| இது | இத்தை |
| வேறு | விசேஷித்து |
| தேற | தெரியும்படி |
| கூறு | அருளிச்செய்யவேணும். (உக) |

பண்டுமின்று மேலுமாயொர் பாலனாகி ஞாலமே
ழுண்டுமண்டி யாலிலைத் துயின்றவாதி தேவனே
வண்டுகிண்டு தண்டுழாய லங்கலாய்க லந்தசீர்ப்
புண்டரீக பாவைசேரு மார்பபூமி நாதனே. (உஉ)

(இ - ள்.)

| | |
|---|---|
| பண்டித்யாதி | |
| பண்டும் | ஸ்ரோஷ்டே பூர்வகாலமென்ன |
| இன்றும் | சிருஷ்டிகாலமென்ன |

| | |
|---|---|
| மேலும் | பிரளயகாலமென்ன இவற்றிலே |
| ஆய் | ரக்ஷகனானவனே |
| ஓர் | அத்விதீயமான |
| பாலனாகி | சிசுவாய் |
| ஞாலமேழும் | பூலோகப்ப்ரபுருதி சப்தலோகங்களையும்மண்டியுண்டென்றுகூட்டுவது |
| மண்டி | விரும்பி |
| உண்டு | அமுதுசெய்து |
| ஆலிலை | வடதளத்திலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளின |
| ஆதி | காரணவஸ்துவான |
| தேவனே | ப்ரகாசகனே |
| வண்டு | ப்ரமரங்கள் |
| கிண்டு | கிளறும் பறக்குமென்றபடி |
| தண் | சிரமஹரமான |
| துழாயலங்கலாய் | திருத்துழாய்மாலையையுடையவனே |
| கலந்த | நித்யசம்சிலிஷ்டையாய் |
| சீர் | கல்யாணகுணங்களையுடையளாய் |
| புண்டரீகம் | தாமரைப்பூவை ஜந்மபூமியாகவுடையளாய் |
| பாவை | நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையளானபிராட்டி |
| சேரும் | நித்யவாசம்பண்ணாநின்ற |
| மார்ப | திருமார்பையுடையவனே |
| பூமிநாதனே | ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாதனானவனே இப்படிப்பட்ட தேவர்க்கு ஆசிருதவத்சலனென்னுமிதோரேற்றமோவென்று வாக்யசேஷம். |

வானிறத்தோர் சீயமாய் வளர்ந்தவாளெ யிற்றவ
னூனிறத் துகிர்த்தல மழுத்தினா யுலாயசீர்
நானிறத்த வேதநாவர் நல்லயோகி னால்வணங்கு
பானிறக் கடற்கிடந்த பற்பநாப னல்லையே. (உ௫)

(இ - ள்.)

வானிறத்தித்யாதி

| | |
|---|---|
| வானிறத்து | வெளுத்தநிறத்தையுடைய |
| ஓர் | விலக்ஷணமான அன்றிக்கே |

| | |
|---|---|
| ஓர் | போக்யதையிலே அத்விதீயமான |
| சீயமாய் | சிம்ஹஸஜாதீயனாயவதரித்து |
| வளர்ந்த | வளராநின்றுள்ள |
| வாள் | ஒளியையுடைய |
| எயிற்றவன் | பல்லுக்களையுடைத்தானஹிரண்யனுடைய |
| ஊனிறத்து | சரீரத்தின்மர்மத்திலே |
| உகிர்த்தலம் | நகங்களுடையபிரதேசத்தை |
| அழுத்தினாய் | அழுத்தினவனே |
| உலாய | சர்வலோகப்பிரசித்தமான |
| சீர் | பிராமாண்யத்தையுடைத்தாய் |
| நால் | சதுர்விதமான |
| நிறம் | உதாத்தாநுதாத்தப்ரசர்யரூபமான மேனியையுடைத்தான |
| வேதம் | வேதங்களை |
| நாவர் | நாக்கிலேயுடைத்தான வைதிகாக்ரேசரர் |
| நல்ல | நன்றாயிருக்கிற |
| யோகினால் | பக்தியுபாயத்தினாலே அன்றிக்கேவிலக்ஷணமான்பிரபத்தியுபாயத்தாலேயென்றுமாம் |
| வணங்கு | ஆசிரயியாநிற்கிற |
| பால் | க்ஷீரத்தினுடைய |
| நிறம் | வர்ணத்தையுடைத்தான |
| கடல் | சமுத்திரத்திலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| பற்பநாபன் | பத்மநாபன் |
| அல்லையே | அன்றோ இப்படிப்பட்ட உன் அகடிதகடனா சாமர்த்தியத்தை யார்பரிச்சேதிக்க வல்லாரென்றுவாக்யசேஷம். (உரு) |

கங்கைநீர் பயந்தபாத பங்கயத்தெம் மண்ணலே
யங்கையாழி சங்குதண்டு வில்லும்வாளு மேந்தினாய்
சிங்கமாய தேவதேவ தேனுலாவு மென்மலர்
மங்கைமன்னி வாழுமார்ப வாழிமேனி மாயனே. (உசா)

( இ - ள். )

| | |
|---|---|
| கங்கையித்யாதி | |
| கங்கைநீர் | கங்காதீர்த்தத்தை |
| பயந்த | உண்டாக்கின |
| பாதபங்கயத்து | பங்கஜம்போலேபோக்யமான திருவடிகளை யுடைய |
| எம் | நம்முடைய |
| அண்ணலே | நாதனே |
| அம் | அழகியதான |
| கை | திருக்கைகளிலே |
| ஆழி | திருவாழியாழ்வானென்ன |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யமென்ன |
| தண்டு | கௌமோதகியென்ன |
| வில்லும் | ஸ்ரீசார்ங்கமென்ன |
| வாளும் | நாந்தகமென்ன இவற்றை |
| ஏந்தினாய் | தரித்தவனே |
| சிங்கமாய | நரசிம்ஹஸஜாதியனாயவதரித்த |
| தேவதேவ | நித்யஸூரிநிர்வாஹகனே |
| தேன் | பிரமரங்கள் |
| உலாவு | சஞ்சரியாநின்றுள்ள |
| மென் | ஸுகுமாரமான |
| மலர் | தாமரைப்பூவைஜந்மபூமியாகவுடைய |
| மங்கை | பெரியபிராட்டியார் |
| மன்னி | நித்யவாசம்பண்ணி |
| வாழும் | அனுபவிக்கும் |
| மார்ப | திருமார்பையுடையவனே |
| ஆழி | சமுத்திரம்போலே சிரமஹரமான |
| மேனி | திருமேனியையுடைய |
| மாயனே | ஆச்சரியபூதனே இங்கேநித்யசூரிகள் பெரியபிராட்டியல்லது வேறேயாருன்னைப்பரிச்சேதிக்கவல்லாரென்று வாக்யசேஷம். () |

வரத்தினிற் சிரத்தைமிக்க வாளெயிற்று மற்றவ
னுரத்தினிற் கரத்தைவைத் துகிர்த்தலத்தை யூன்றினா
யிரத்திநீயி தென்னபொய் யிரந்தமண் வயிற்றுளே
கரத்தியுன் கருத்தையாவர் காணவல்லர் கண்ணனே. (உரு)

(இ - ள்.)

வரத்தினிலித்யாதி

| | |
|---|---|
| வரத்தினில் | பிரமாதந்தவரத்திலே |
| சிரத்தை | சிரத்தையாலே |
| மிக்க | அதிசயித்திருக்கிற |
| வாள் | அசிபோலேயிருக்கிற |
| எயிற்று | கோரைப்பல்லுகளையுடைய |
| மற்றவன் | ஆசிருதவிரோதியானஹிரண்யனுடைய |
| உரத்தினில் | மார்விலே |
| கரத்தை | திருக்கைகளை |
| வைத்து | |
| உகிர் | நகங்களினுடைய |
| தலத்தை | பிரதேசத்தை |
| ஊன்றினாய் | ஊன்றிக்கொன்றாய் |
| நீ | சர்வசக்தியாய் அவாப்தசமஸ்தகாமனான நீ |
| இரத்தி | மஹாபலிபக்கல்பூமியையிரந்தாய் |
| இது | மஹாபலிபக்கல்பூமியையிரந்தவிது |
| என்னபொய் | பிரமாணங்களைப்பார்த்தால் மெய்யாயிருக்கிறது அர்த்தஸ்திதியைப்பார்த்தால் பொய்யாயிருக்கிறது ஆகையாலே இதென்னஆச்சரியபூதமானபொய் |
| இரந்த | மஹாபலிபக்கலிலே அர்த்தித்துப்பெற்ற |
| மண் | பூமியை |
| வயிற்றுளே | திருவுதரத்திலே |
| கரத்தி | ஒளித்துரக்ஷித்தாய் |
| உன்கருத்தை | இப்படி அநந்யப்ரயோஜநாந்தர பரவிமுகர்களை ரக்ஷித்தவுன்னினைவை |
| யாவர்காணவல்லர் | காணவல்லார்யாவர் |
| கண்ணனே | கிருஷ்ணனாய்வந்தவதரித்தவனே நீயேஅருளிச்செய்யவேணுமென்றுகருத்து. (உ௫) |

ஆணினோடு பெண்ணுமாகி யல்லவோடு நல்லவா
யூனொடோசை யூறுமாகி யொன்றலாத மாயையாய்ப்
பூணிபேணு மாயனாகிப் பொய்யினோடு மெய்யுமாய்க்
காணிபேணு மாணியாய்க் காந்துசென்ற கள்வனே. (உ௬)

( இ - ள். )

ஆணினோடித்யாதி

| | |
|---|---|
| ஆணினோடுபெண்ணுமாகி | ஜகத்விஸ்தரணார்த்தமாக ஸ்த்ரீபும்ஸவிபாகத்தைப்பண்ணி அவர்களுக்கந்த ராத்மாவாய்நின்று நிர்வாஹகனாய் |
| அல்லவோடு | நபும்ஸகபதார்த்தத்தோடுகூடின |
| நல்லவாய் | இந்தலிங்கத்ரயவிசிஷ்டபதார்த்தங்களிலே விலக்ஷணமானபதார்த்தங்களுக்குநிர்வாஹகனாய் நிர்வாஹ்யதாயாம்ஸாஹித்யம் |
| ஊண் | ரசமென்ன |
| ஓசை | சப்தமென்ன |
| ஊறுமாகி | ஸ்பர்சமென்ன ஏததுபலக்ஷிதங்களான்விஷயாதிகளுக்கு கர்மானுகூலமாக நியாமகனாய் |
| ஒன்றலாத | ஒன்றுக்குமாத்ரம் காரணமின்றிக்கேயிருக்கிறஸர்வகாரணமென்றபடி |
| மாயையாய் | பிரகிருதித்வத்துக்கு நிர்வாஹகனாய் அன்றிக்கேமாயையால் ஆச்சர்யத்தையுடையவனாயென்றுமாம் |
| பூணி | பசுக்களை |
| பேணும் | ஆதரிக்கிற |
| ஆயனாகி | கோபஸஜாதீயனாய் |
| பொய்யினோடு | துர்யோதனாதிகள்பக்கலிலே பொய்யோடேகூடின |
| மெய்யுமாய் | பாண்டவர்பக்கல்மெய்யையுடையவனாய் |
| காணி | பூமியை |
| பேணும் | ஆதரிக்கும் |
| மாணியாய் | வாமநப்ரம்ஹசாரியாய் |
| கரந்துசென்ற | மறைந்துசென்ற |
| கள்வனே | கிருத்திரிமனே உன்னையார்மதிக்கவல்லாரொன்றுமேற்பாட்டோடே அந்வயம். (உசு) |

விண்கடந்த சோதியாய் விளங்குஞான மூர்த்தியாய்ப்
பண்கடந்த தேசமேவு பாவநாச நாதனே
யெண்கடந்த யோகினோ டிரந்துசென்று மாணியாய்
மண்கடந்த வண்ணநின்னை யார்மதிக்க வல்லரே. (உஎ)

( இ - ள். )

விண்ணித்யாதி

| | |
|---|---|
| விண் | விபுவானமூலப்பிரகிருதியை |
| கடந்த | அதிக்கிரமித்த |
| சோதியாய் | ஸ்வயம்பிரகாசவஸ்துவான ஸ்வரூபத்தையுடையவனாய்-உபநிஷத்திலே பூதாகாசப்பிரசித்தமான ஆகாசசப்தத்தை ஆகாசேதஶோதஞ்சப்ரோதஞ்ச என்று மூலப்பிரகிருதியிலேபிரயோகிக்கையாலே அங்கே பூதாகாசப்பிரசித்தமான விண் என்கிற இத்தை மூலப்பிரகிருதியிலே பிரயோகிக்கிறது |
| விளங்குஞானம் | ஸ்வயம்பிரகாசமான க்ஞானகுணதத்வாத்க்ஞானசப்தவாச்யனான சேதனனை |
| மூர்த்தியாய் | சரீரமாகவுடையனாய் |
| பண் | ஸ்வரப்பிரதானமானவேதத்தை ஸ்வரவாசியானபண்ணென்கிற வித்ததாசிரயவேதத்திலேஔபசாரிகம் |
| கடந்த | அதிக்கிரமித்த |
| தேசு | தேஜஸ்ஸாலே |
| மேவு | ஸாந்திரமான |
| பாவநாச | ஹேயப்பிரத்தியநீகனான |
| நாதனே | சர்வேஸ்வரனே |
| எண் | சங்கியையை |
| கடந்த | அதிக்கிரமித்த |
| யோகினோடு | கல்யாணகுணயோகத்தோடேகூட் |
| இரந்து | யாசநாஸீலனாய் |
| சென்று | போந்தவனென்றுதோற்றும்படிபோய் |
| மாணியாய் | வாமனப்பிரமசாரியாய் அன்றியிலே மாணியாயிரந்துசென்றென்றுகூட்டி |
| மாணியாய் | வாமனப்பிரமசாரியாய் |
| இரந்துசென்று | அர்த்தியாய்ச்சென்று |
| மண் | பூமியை |
| கடந்த | அளந்துகொண்ட |
| வண்ணம் | பிரகாரத்தையுடைய |

| | |
|---|---|
| நின்னை | வேதாபரிச்சேத்யஸ்வரூபனாய்ப் பூமியைய ளந்துகொண்ட வுன்னைமதிக்கவல்லாராரொ ன்றுகூட்டுவது பரிச்சேதிக்கவல்லாரார் |
| அதவாவிண்ணித்தியாதி | |
| விண் | பரமாகாசமானதிரிபாத்விபூதியை |
| கடந்த | அதிக்கிரமித்த |
| சோதியாய் | திவ்வியாத்மஸ்வரூபத்தையுடையனாய் விள ங்குஞானமூர்த்தியாயென்று கூட்டுவது |
| ஞானம் | ஞாநாதிஷாட்குண்யத்துக்கு |
| விளங்கு | பிரகாசகமான |
| மூர்த்தியாய் | திவ்வியமங்களவிக்கிரகத்தையுடையவனாய் |
| பண்கடந்த | வேதாபரிச்சேத்தியமான |
| தேச | பரமபதமாகிற அப்பிராகிருதசேத்திலே |
| மேவு | நித்தியவாசம்பண்ணுமவனாய் |
| பாவநாசநாதனே | ஹேயப்பிரத்தியநீகனானஸர்வேஸ்வரனே |
| எண்கடந்த | ஸங்கியாதீதமான |
| யோகினோடு | ஆச்சரியசக்தியோகத்தோடேகூடினவனாய்க்கொண்டு |
| மாணியாய் | வாமனப்பிரமசாரியாய் |
| இரந்துசென்று | அர்த்தியாய்ச்சென்று |
| மண்கடந்தவண்ணம் | பூமியையளந்துகொண்டபிரகாரத்தை யுடைய |
| நின்னை | பூர்வோத்தரவிசேஷணயுக்தனானவுன்னை |
| யார்மதிக்கவல்லார் | பரிச்சேதிக்கச்சமர்த்தரார். (உஎ) |

படைத்தபா ரிடந்தளந்த துண்டுமிழ்ந்து பவ்வநீர்
படைத்தடைத் ததிற்கிடந்து முன்கடைந்த பெற்றியோய்
மிடைத்தமாலி மாலிமான் விலங்குகால னூர்புகப்
படைக்கலம் விடுத்தபல் படைத்தடக்கை மாயனே. (உஅ)

( இ - ள். )

படைத்தித்யாதி பவ்வநீர்படைத்து படைத்தபாரிடந்தளந்து அ துண்டுமிழ்ந்து என்றுகூட்டுவது.

| | |
|---|---|
| பவ்வநீர் | அண்டகாரணமான ஏகார்ணவத்தை |
| படைத்து | சிருஷ்டித்து |
| படைத்த | அண்டபிரம்ஹ சிருஷ்டமான |

| | |
|---|---|
| பார் | பூமியை |
| இடந்து | வராஹஸஜாதியனுயிடந்து |
| அளந்து | மகாபலிபக்கல்அர்த்தித்துஅளந்துகொண்டு |
| அது | அந்தப்பூமியை |
| உண்டு | பிரளயம்வரவயிற்றிலேவைத்து |
| உமிழ்ந்து | நோவுபடாமலுமிழ்ந்து பவ்வநீர்படைத்தென்றிங்கேயுங் கூட்டுவது |
| பவ்வநீர் | சமுத்திரஜலத்தை |
| படைத்து | சிருஷ்டித்து |
| அடைத்து | திருவணையிட்டு |
| முன் | முன்னே |
| அதிற்கிடந்து | அந்தச்சமுத்திரஜலத்திலேகண்வளர்ந்தருளி |
| கடைந்த | அமிர்தமதனம்பண்ணின |
| பெற்றியோய் | மஹாபிரபாவத்தையுடையவனே |
| மிடைத்த | கோபித்த |
| மாலி | மாலியென்கிறஅசுரனையும் |
| மாலிமான்விலங்கு | சுமாலியென்கிறதிரியக்கையும் அன்றிக்கே திரியக்பிரவிருத்தனுனசுமாலியென்னவுமாம்இவர்கள் |
| காலன் | யமனுடைய |
| ஊர் | புரத்திலே |
| புக | பிரவேசிக்கும்படி |
| படைக்கலம் | ஆயுதங்களான சாதநங்களை |
| விடுத்த | ஏவின |
| பல் | அநேகங்களான |
| படை | திவ்வியாயுதங்களையுடைய |
| தடம் | விஸ்திருதமான |
| கை | திருக்கைகளையுடைய |
| மாயனே | ஆச்சரியபூதனே |

இப்பாட்டுக்கு மேலிற்பாட்டில் கிரியையோடே ஏகவாக்கியதாந்வயம். (உ௮)

பரத்திலும் பரத்தையாகிப் பவ்வநீ ரணைக்கிடந்
துரத்திலு மொருத்திதன்னை வைத்துகந்த தன்றியு
நரத்திலும் பிறத்திநாத ஞானமூர்த்தி யாயினு
யொருத்த ருங்கினுதுதன்மை யின்னதென்ன வல்லரே. (உ௯)

(இ - ள்.)

பரத்திலுமித்யாதி

| | |
|---|---|
| பரத்திலும் | பிரகிருதேப்பரமானதிரிவிதாத்மவர்க்கத்திலும் |
| பரத்தையாகி | விலக்ஷணமானஸ்வரூபத்தையுடையவனாய் அநந்தரம் |
| உரத்திலும் | உரத்திலுமென்கிறபாதத்தை யந்வயிக்கக்கடவது வக்ஷஸ்தலத்திலேயும் ஸ்வரூபாந்தர்ப்பாவம்சமுச்சயத்துக்கர்த்தம் |
| ஒருத்திதன்னை | அத்விதியையாய்ப்பிரதானமஹிஷியானபெரியபிராட்டியை |
| வைத்து | நித்தியவாசம்பண்ணும்படிவைத்து |
| உகந்து | சம்சிலேஷரஸங்களையனுபவித்துக்கொண்டு |
| பவ்வநீர் | சமுத்திரஜலமாகிற |
| அணை | படுக்கையிலே |
| கிடந்து | அநிருத்தரூபியாய்க்கண்வளர்ந்தருளி இது சங்கருஷணாதிகளுக்குமுபலக்ஷணம் |
| அதன்றியும் | கரணகளேபரப்பிரதாந வியூகாவதாரங்களாலேரக்ஷித்தவளவன்றியே |
| நரத்திலும் | கர்ஹாவிஷயமானநரஜாதியிலே கர்ஹாசமுச்சயெஷ்வபியிறே |
| பிறத்தி | ராமகிருஷ்ணாதிரூபேண அவதரித்தாய் |
| நாத | நிருபாதிகஸ்வாமியானவனே |
| ஞானமூர்த்தியாயினாய் | ஞானஸ்வரூபனானவனே |
| ஒருத்தரும் | வேதங்களென்ன க்ஞாநாதிகரானவைதிகரென்னஇவர்களிலேஒருத்தரும் |
| நினதுதன்மை | உன்னுடையஅநுக்கிரகாத்மகமான வொரு ஸ்வபாவத்தை |
| இன்னதென்ன | ஏவம்விதமென்றுபரிச்சேதிக்க |
| வல்லரோ | சமர்த்தரோ. (உக) |

வானகமும் மண்ணகமும் வெற்புமேழ் கடல்களும்
போனகஞ்செய் தாலிலைத் துயின்றபுண்ட ரீகனே
தேனகஞ்செய் தண்ணறும் மலர்த்துழாய்நன் மாலையாய்
கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி யல்லையே. (௩௰)

(இ-ள்.)

வானகமுமித்தியாதி

| | |
|---|---|
| வானகமும் | ஸ்வர்க்கவாசிகளானஇந்திராதிகளும் |
| மண்ணகமும் | பூமியிலுள்ளோரும் மஞ்சாக்குரோசந்தி போலே |
| வெற்பும் | சப்தகுலபர்வதங்களும் ஏழென்றுமத்தியமணிகியாயத்தாலே வெற்புகடல்களிலே அந்வயிக்கக்கடவது |
| ஏழ்கடல்களும் | த்வீபவ்யவஸ்தாபகங்களான சப்தார்ணவங்களும் |
| போனகஞ்செய்து | அமுதுசெய்து |
| ஆலிலை | வடதளத்திலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளின |
| புண்டரீகனே | புண்டரீகஸதுருசாவயவனே இஹபுண்டரீகம்ரக்தாம்போஜம் |
| தேன் | வண்டுகளாலே |
| செய்து | தொடர்ந்திருக்கிற |
| அகம் | அந்தப்பிரதேசத்தையுடைய அன்றிக்கே |
| தேன் | மதுவாலே |
| செய் | பூர்ணமான |
| அகம் | அந்தப்பிரதேசத்தையுடைய |
| தண் | சிரமஹரமான |
| நறு | பரிமளவத்தான |
| மலர் | புஷ்பிதமான |
| துழாய் | திருத்துழாயினுடைய |
| நன் | ஆகர்ஷகமான |
| மாலையாய் | திருமாலையையுடையவனே |
| கூன் | குப்ஜையினுடைய |
| அகம்புக | சரீரத்துக்குள்ளேயடங்கும்படி |
| தெறித்த | உண்டைவில்லைத்தெறித்த |
| கொற்றம் | ஜயசீலமான |
| வில்லி | தனுஷ்கன் |
| அல்லையே | அன்றோ |

இப்பாட்டுத்தொடங்கி முப்பத்தினாலாம்பாட்டளவும் அப்பாட்டிலிருக்குமாயமென்னமாயமேயென்கிற இதுகிரியை (௩௰)

காலநேமி காலனே கணக்கிலாத கீர்த்தியாய்
ஞாலமேழு முண்டுபண்டோர் பாலனாய பண்பனே
வேலைவேவ வில்வளைத்த வெல்சினத்த வீரநின்
பாலராய பத்தர்சித்த முத்திசெய்யு மூர்த்தியே. (௩௧)

( இ - ள். )

காலநேமியித்தியாதி காலநேமியென்று பெயரையுடைய அசுரனுக்கு

| | |
|---|---|
| காலநேமி | தந்நாமகாசுரனுக்கு |
| காலனே | மிருத்தியுவாயிருக்குமவனே |
| கணக்கு | சங்கியை |
| இலாத | இல்லாத |
| கீர்த்தியாய் | சௌலப்பியாதிகுணவத்தாபிரதையையுடையவனே |
| ஞாலமேழும் | பூப்பிரபுருதிசப்தலோகங்களையும் |
| உண்டு | அமுதுசெய்து |
| பண்டு | பூர்வகல்பாவஸாநத்திலே |
| ஓர்பாலனாய | அத்விதியசிசுவான |
| பண்பனே | ஸ்வபாவத்தையுடையவனே விசித்திரசக்தியையுடையவனென்றபடி |
| வேலை | சமுத்திரஜலம் |
| வேவ | தக்தமாம்படி |
| வில் | தனுசை |
| வளைத்த | மண்டலீகரித்த |
| வெல் | பிரதிபக்ஷத்தைஜயிக்கும்படியான |
| சினத்த | குரோதத்தையுடைய |
| வீர | நிருபாதிகவீரனானவனே |
| நின் | உன்னுடைய |
| பாலராய | பிரதேசவர்த்திகளான உன்பார்சுவவர்த்திகளானவென்றபடி |
| பத்தர் | பத்தர்களுடைய |
| சித்தம் | மநஸினுடைய |
| முத்தி | பிராப்யபிராபகாந்தரவிநிர்மோகத்தை |
| செய்யும் | செய்கிற |

| | |
|---|---|
| மூர்த்தியே | பிரபாவத்தையுடையவனே மூச்சாமோஹ சமுச்ச்ராயயோ என்கிறதாதுவிலே மூர்த்தி சப்தமாய் சமுச்சிராயவாசியாய் பிரபாவத்தைக்காட்டுகிறது உன்மாயமென்னமாய மென்றுகுளகம். (௩௧) |

குரக்கினப் படைகொடு குளைகடலின் மீதுபோ
யரக்கரங் கரங்கவெஞ் சரந்துரந்த வாதிநீ
யிரக்கமண் கொடுத்தவற் கிரக்கமொன்று மின்றியே
பரக்கவைத் தளந்துகொண்ட பற்பபாத னல்லையே. (௩௨)

(இ - ள்.)

குரக்கினமித்தியாதி

| | |
|---|---|
| குரக்கு | வானரங்களுடைய |
| இனம் | சமூகமான |
| படை | சேனையை |
| கொடு | கொண்டு |
| குளை | கோஷத்தையுடைய |
| கடலின் | சாகரத்தினுடைய |
| மீது | மேலே |
| போய் | திருவணையிட்டுப்போய் |
| அரக்கர் | ராவணாதிராக்ஷஸர்கள் |
| அங்கு | அங்கே |
| அரங்க | பயப்படும்படி அரங்கவென்ற மெல்லொற்றைவல்லொற்றாக்கி அரக்கஎன்றாய் ஒளியும்படியென்றர்த்தமாகக்கடவது |
| வெம் | பாவகசங்காசமான |
| சரம் | திருச்சரங்களை |
| துரந்த | நடத்தின |
| ஆதி | வீரர்களிலேபிரதானபூதன் |
| நீ | தேவர் |
| இரக்க | நீஅர்த்தியாய்ச்செல்ல |
| மண் | பூமியை |
| கொடுத்தவற்கு | கொடுத்தமகாபலிக்கு |
| இரக்கம் | ரக்ஷகம் |
| ஒன்றுமின்றியே | ஒருபதநியாசமும்சேஷியாதபடியென்றபடி |

| | |
|---|---|
| பரக்க | அதிவிபுலமாக |
| வைத்து | விந்நியஸித்து |
| அளந்துகொண்ட | |
| பற்பம் | பத்மம்போலேயிருக்கிற |
| பாதன் | திருவடிகளையுடையவன் |
| அல்லையே | அன்றோ |

மாயமென்னமாயமே இதென்ன ஆச்சரியமென்றுகிரியை. (௫௨)

மின்னிறத் தெயிற்றரக்கன் வீழவெஞ் சரந்துரந்து
பின்னவற் கருள்புரிந் தரசளித்த பெற்றியோய்
நன்னிறத்தொ ரின்சொலேழை பின்னைகேள்வ மன்னுசீர்ப்
பொன்னிறத்த வண்ணனாய புண்டரீக னல்லையே. (௫௩)

( இ - ள். )

மின்னிறத்தித்யாதி

| | |
|---|---|
| மின் | மின்னல்போலே |
| நிறத்து | ஒளியையுடைய |
| எயிற்று | தந்தங்களையுடைய |
| அரக்கன் | இராவணனை |
| வீழ | முடியும்படி |
| வெம் | பாவகசங்காசமான |
| சரம் | திருச்சரத்தை |
| துரந்து | ஏவி |
| பின்னவற்கு | அந்தராவணாநுஜனானவிபீஷணாழ்வானுக்கு |
| அருள்புரிந்து | பிரசாதத்தைப்பண்ணி |
| அரசு | ராஜ்ஜியத்தை |
| அளித்த | கொடுத்த |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே |
| நன் | நன்றாயிருக்கிற |
| நிறத்து | லாவண்ணியத்தையுடையளாய் |
| ஓர் | அத்விதீயமான |
| இன் | மதுரமான |
| சொல் | சொல்லையுடைத்தான |
| ஏழை | தேவர்பக்கல் அதிசபலையுமான |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டிக்கு |
| கேள்வ | வல்லபனானவனே |

| | |
|---|---|
| மன்னு | நித்தியமான |
| சீர் | ஔதாரியகுணங்களையுடைய |
| பொன் | பொன்போல் ஸ்பிரஹணீயமான |
| நிறத்த | அவயவசோபையென்ன |
| வண்ணனாய | வர்ணசோபையையுமுடையனான |
| புண்டரீகன் | புண்டரீகாக்ஷன் அன்றிக்கே |
| புண்டரீகன் | திருமார்புவாய் கண்கையுந்திகாலுடையா டைகள்செய்யபிரானென்றும் கண்ணும்செந்தாமரைகையுமவையடியோவவையே என்றுஞ்சொல்லுகிறபடியே தாமரைபோன்ற அவையவங்களையுடையவனென்றபடி |
| அல்லையே | அன்றோ |

இதென்னஆச்சரியமென்றுகிரியை. (௩௩)

ஆதியாதி யாதிநீயொ ரண்டமாதி யாதலாற்
சோதியாத சோதிநீய துண்மையில் விளங்கினாய்
வேதமாகி வேள்வியாகி விண்ணினோடு மண்ணுமா
யாதியாகி யாயனாய மாயமென்ன மாயமே. (௩௪)

( இ - ள். )

ஆதியித்தியாதி

| | |
|---|---|
| ஆதியாதியாதி | திரிவிதகாரணமும் |
| நீ | தேவர்-காரணபரமான ஆதிசப்தத்திரயத்தாலே காரணத்வதிரயத்தைச்சொல்லுகிறது |
| ஓர் | ஏகரூபமான |
| அண்டம் | அண்டஜாதமாய்ஜாதியேகவசநம் |
| ஆதி | அநந்தரம் ததந்தர்வர்த்தி பிரமாதிபிபீலிகாந்தங்களான சகலபதார்த்தங்களையும் சிருஷடித்துத்ததந்தர்யாமியாயும் |
| நீ | தேவர் |
| ஆதலால் | இப்படிசகலகாரணபூதனாகையாலே |
| சோதியாத | பரிக்ஷிக்கவேண்டாத |
| சோதிநீ | உபாஸ்யதேஜஸ்தத்வம்நீ |
| அது | தேஜஸ்தத்வம் |

| | |
|---|---|
| உண்மையில் | சத்தியத்துவத்தாலே நித்தியநிர்த்தோஷப் பிரமாணசித்தமாகையாலே யென்றபடி |
| விளங்கினாய் | இதரவிஸஜாதீயனாய்க்கொண்டு பிரகாசியா நிற்கிறவனே |
| வேதமாகி | வேதநிர்வாஹகனாய் |
| வேள்வியாகி | அந்தவேதார்த்தயாகாத்தியனாய் |
| விண்ணினோடு | பரமபதத்தோடேகூடின |
| மண்ணுமாய் | லீலாவிபூதிக்கு நிர்வாஹகனாய் மண்ணென்றெல்லாவற்றுக்குமுபலக்ஷணம் |
| ஆதியாகி | ஆசிரயணருசிக்குநிர்வாஹகனாய் |
| ஆயனாய் | கோபஸஜாதீயனாயவதரித்த |
| மாயம் | ஆச்சரியம் |
| என்னமாயம் | என்னஆச்சரியம் குளகம் சமாப்தம். (ருச) |

அம்புலாவு மீனுமாகி யாழியாகி யாயனார்
தம்பிரானு மாகிமிக்க தன்புமிக்க தன்றியுங்
கொம்பராவு நுண்மருங்கு லாயர்மாதர் பிள்ளையா
யெம்பிரானு மாயவண்ண மென்கொலோவெம் மீசனே. (ருரு)

(இ - ள்.)

அம்புலாவித்தியாதி ஆழியார்தம்பிரானுமாகி யம்புலாவுமீனுமாகியாமையாகிமிக்கதென்றந்வயித்து

| | |
|---|---|
| ஆழியார் | சர்வேசுவரத்வசூசகத்வமான திருவாழியாழ்வானையுடைய |
| தம்பிரானுமாகி | சர்வேசுவரனாய்வைத்து |
| அம்பு | ஜலத்திலே அப்புஎன்கிற இதுமெல்லொற்றாய்க்கிடக்கிறது |
| உலாவு | சஞ்சரியாநின்றுள்ள |
| மீனுமாகி | மத்சியஸஜாதீயனாயவதரித்து |
| ஆமையாகி | கூர்மஸஜாதீயனாயவதரித்து |
| மிக்கது | க்ஷத்திரயோநியென்று அதுவே அதிசயிதமான |
| அன்புமிக்கு | ஆபந்நர்பக்கல்சங்கம் அதிசயவத்தாயிருக்கிறது |
| அதன்றியும் | அவ்வளவன்றியே |

| | |
|---|---|
| கொம்பு | கொம்புபோலேயும் |
| அராவு | அஹிபோலேயும் |
| நுண் | ஸூக்ஷ்மமான |
| மருங்குல் | இடையையுடைய |
| ஆயர்மாதர் | கோபாங்கனையானயசோதைப்பிராட்டிக்கு |
| பிள்ளையாய் | புத்ரனாய் கட்டவுமடிக்கவுநியாம்யனாயென்றபடி |
| எம்பிரானுமாயவண்ணம் | அந்தச்சௌலப்பியாதிசயத்தாலே யெங்களை அநந்யார்ஹமாக்கிக்கொண்ட மஹோபகாரகனானபிரகாரம் |
| என்கொல் | என்செய்தபடி |
| எமீசனே | எங்களுக்குநிருபாதிகஸ்வாமியானவனே |
| பஹுவசனம் | மற்றையாழ்வார்களைக் கூட்டிச்சொன்னபடி. (௫௫) |

ஆடகத்த பூண்முலைய சோதையாய்ச்சி பிள்ளையாய்ச்
சாடுதைத்தோர் புள்ளதாவி கள்ளதாய பேய்மகள்
வீடவைத்த வெய்யகொங்கை யையபா லமுதுசெய்
தாடகக்கை மாதர்வா யமுதமுண்ட தென்கொலோ. (௫௬)

(இ - ள்.)

ஆடகத்தித்தியாதி

| | |
|---|---|
| ஆடகத்த | ஆடகமயமான |
| பூண் | ஹாரத்தையுடைய |
| முலை | ஸ்தநத்தையுடைய |
| அசோதையாய்ச்சிபிள்ளையாய் | யசோதையாகிறகோபஸ்திரியினுடைய புத்திரனாய் |
| சாடு | சகடாசுரனை |
| உதைத்து | திருவடிகளாலேநிரஸித்து |
| ஓர்புள்ளது | பாலாரிஷ்ட ஜநநத்திலே அத்விதீயமான தோஷபக்ஷிவிசேஷத்தினுடைய |
| ஆவி | கருத்தையுடையவளாய் |
| கள்ளதாய | கிருத்திரிமமாதாவான |
| பேய்மகள் | பேய்ப்பெண் |
| வீட | ஜகஜ்ஜீவனமானவுன்விஷயத்திலே தீங்கு செய்வாளாய் |

| | |
|---|---|
| வைத்த | திருப்பவளத்திலேவைத்த |
| வெய்ய | குரூரமான |
| கொங்கை | ஸ்தநத்தில் |
| ஐய | ஸூக்ஷமமான |
| பால் | பாலே அன்றிக்கே |
| ஐயவென்று | சம்புத்தியாகவுமாம் |
| அமுதுசெய்து | உண்டு |
| ஆடகம் | ஸ்வர்ணபூஷிதமான |
| கை | கைகளையுடைய |
| மாதர் | கோபிகைகளுடைய |
| வாயமுதம் | வாகமிர்தத்தை |
| உண்டது | அமுதுசெய்த இது |
| என்கொல் | என்னஆச்சரியம். (கூசு) |

காய்த்தநீள் விளங்கனி யுதிர்த்தெறிந்து பூங்குருந்தஞ்
சாய்த்துமா பிளந்தகைத் தலத்தகண்ண னென்பரா
லாய்ச்சிபாலே யுண்டுமண்ணை யுண்டுவெண்ணெ யுண்டுபின்
பேய்ச்சிபாலே யுண்டுபண்டோ ரேனமாய வாமனா (கூஎ)

( இ - ள். )

காய்த்தவித்தியாதி

| | |
|---|---|
| காய்த்த | பரப்படங்கக் காயையுடைய |
| நீள் | உயர்த்தியையுடைத்தான் |
| விளங்கனி | விளாவினுடையபழங்களை |
| உதிர்த்து | விழவிட்டு |
| எறிந்து | அந்தஅசுரனைமுடியச்செய்தெறிந்து |
| பூம் | ஸ்பிரஹணீயமாதல் புஷ்பிதமாதலாகவிருக்கிற |
| குருந்தம் | குருந்தமரத்தை |
| சாய்த்து | வேரறவிழவிட்டு |
| மா | அசுவரூபியானகேசியை |
| பிளந்த | இருகூறாகப்பண்ணின |
| கைத்தலத்தகண்ணன் | ஆயுதநிரபேக்ஷகரதலமாத்திரஸாதநன் |
| என்பர் | என்றுஞானாதிகரான வியாசபராசராதிகள் சொல்லாநிற்பர்கள் |

ஆய்ச்சியித்தியாதி

ஆய்ச்சிபாலையுண்டு வெண்ணெயுண்டு பேய்ச்சிபாலையுண்டு பின்மண்ணையுண்டென்றந்வயிக்கக்கடவது

| | |
|---|---|
| ஆய்ச்சி | கோபஸ்திரீயானயசோதையினுடைய |
| பாலை | ஸ்தந்யத்தை |
| உண்டு | அமுதுசெய்து |
| வெண்ணெயுண்டு | நவநீதத்தையமுதுசெய்து |
| பேய்ச்சி | பூதனையினுடைய |
| பாலை | ஸ்தந்யத்தை |
| உண்டு | அமுதுசெய்து |
| பின் | கல்பாவஸாநத்திலே |
| மண்ணை | பூமியை |
| உண்டு | திருவயிற்றிலேவைத்து |
| பண்டு | கல்பாதியிலே |
| ஓர் | அத்விதீயமான |
| ஏனமாய | வராஹஸஜாதீயனாயவதரித்த |
| வாமனா | மஹாபலிபக்கல்நின்றும் அந்தபூமியைவாங்குகைக்கு ஸ்ரீவாமநனாயவதரித்தவனே. () |

கடங்கலந்த வன்கரிஇ மருப்பொசித்தோர் பொய்கைவாய்
விடங்கலந்த பாம்பின்மே னடம்பயின்ற நாதனே
குடங்கலந்த கூத்தனாய கொண்டல்வண்ண தண்டுழாய்
வடங்கலந்த மாலைமார்ப வாழிமேனி மாயனே. (ருஅ)

( இ - ள். )

கடங்கலந்தவித்தியாதி

| | |
|---|---|
| கடம் | மதஜலத்தாலே |
| கலந்த | வியாப்தமான |
| வன் | பலிஷ்டமான |
| கரி | குவலயாபீடத்தினுடைய |
| மருப்பு | கொம்பை |
| ஒசித்து | முறித்து |
| ஓர் | அத்விதீயமான |
| பொய்கை | யமுநாஹ்ருதத்தினுடைய |
| வாய் | பிரதேசத்திலே |
| விடம் | விஷத்தாலே |

| | |
|---|---|
| கலந்த | வியாப்தனான |
| பாம்பின்மேல் | காளியனுடையபணங்களின்மேலே |
| நடம் | நாட்டியத்தை |
| பயின்ற | பண்ணின |
| நாதனே | விரோதிநிரஸநத்தாலேதன்னுடைய நிருபாதிகநாதத்வத்தைப்பிரகாசிப்பித்தவனே |
| குடம் | கும்பத்தோடே |
| கலந்த | பொருந்தின |
| கூத்தனாய | ஜாதியுசிதநர்த்தனத்தையுடையவனான |
| கொண்டல்வண்ண | மேகம்போலேயிருக்கிறஅந்தகும்பநர்த்தன சௌந்தரியத்தையனுபவிப்பிக்கும் ஔதாரியமாகிற ஸ்வபாவத்தையுடையவனென்னுதல் ப்ரயோஜன நிரபேக்ஷமாகவருஷிக்கிற மேகஸ்வபாவனென்னுதல் சாங்யதாத்மகமான மேகஸ்வபாவத்தையுடையவனென்னுதல் |
| தண் | சிரமஹரமான |
| துழாய் | திருத்துழாயினுடைய |
| வடம் | சிருக்விசேஷத்தோடே |
| கலந்த | கூடின |
| மாலை | மாலையையுடைத்தான |
| மார்வ | திருமார்பையுடையவனே |
| ஆழி | சமுத்திரம்போன்ற |
| மேனி | திருமேனியையுடைய |
| மாயனே | ஆச்சரியபூதனே |

காலநேமிகாலனேயென்று பாடஞ்சொல்லுவாருமுளர் அப்போது காலநேமியென்கிற அசுரனுக்கு மிருத்தியுவானவனென்று பொருளாய் விரோதிநிரஸநசீலனென்றபடி. (௰௮)

வெற்பெடுத்து வேலைநீர் கலக்கினாய தன்றியும்
வெற்பெடுத்து வேலைநீர் வரம்புகட்டி வேலைசூழ்
வெற்பெடுத்த விஞ்சிசூ ழிலங்கைகட் டழித்தநீ
வெற்பெடுத்து மாரிகாத்த மேகவண்ண னல்லையே. (௰௯)

(இ - ள்.)

வெற்பெடுத்திதியாதி

| | |
|---|---|
| வெற்பு | மந்தரபர்வதத்தை |
| எடுத்து | தரித்து |
| வேலைநீர் | சமுத்திரஜலத்தை |
| கலக்கினாய் | மதனம்பண்ணினாய் |
| அதன்றியும் | அவ்வளவன்றிக்கே |
| வெற்பு | பர்வதங்களை |
| எடுத்து | வானரங்களைக்கொண்டெடுப்பித்து |
| வேலைநீர் | சமுத்திரஜலத்திலே |
| வரம்பு | திருவணையை |
| கட்டி | இட்டு |
| வேலை | சமுத்திரமாகிறபரிகையினாலே |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| வெற்பு | திரிகூடபர்வதத்திலே |
| எடுத்த | விசுவகர்மாவாலேசமைத்த |
| இஞ்சி | மதிளாலே |
| சூழ் | பரிவிருதமான சூழப்பட்டிருக்கிற |
| இலங்கை | லங்கையினுடைய |
| கட்டு | அரணை அன்றிக்கே |
| கட்டு | அதர்மஸ்வபாவத்தை |
| அழித்த | போக்கின |
| நீ | தேவர் |
| வெற்பு | கோவர்த்தனபர்வதத்தை |
| எடுத்து | தரித்து |
| மாரி | வர்ஷத்தினின்றும் |
| காத்த | ரக்ஷித்த |
| மேகவண்ணனல்லையே | காளமேகநிறசியாமனன்றே அன்றிக்கேவருஷகவலாஹகம்போலேமஹோதாரனன்றே |
| வண்ணம் | ஸ்வபாவம் விக்கிரகாத்மஸ்வபாவமும் ஔதார்யாத்மகஸ்வபாவமும். (௫௯) |

ஆனைகாத்தொ ரானைகொன்ற தன்றியாயர் பிள்ளையா
யானைமேய்த்தி யானெயுண்டி யன்றுகுன்ற மொன்றினா
லானைகாத்து மையரிக்கண் மாதரார் திறத்துமுன்
னானையன்று சென்றடர்த்த மாயமென்ன மாயமே. (௬௰)

(இ - ள்.)

| | |
|---|---|
| ஆனைகாத்தித்தியாதி | |
| ஆனை | ஸ்ரீகஜேந்திராழ்வானை |
| காத்து | ரக்ஷித்து அதன்றியாயர் பிள்ளையாயோரா னைகொன்றென்றந்வயம் |
| அதன்றி | அவ்வளவன்றியே |
| ஆயர் | இடைஜாதிக்கு ஜாத்யாக்யாயாம்பஹுவசனம் |
| பிள்ளையாய் | நியாமியனாய் |
| ஓர் | அத்விதீயமான |
| ஆனை | குவலயாபீடத்தை |
| கொன்று | வதைத்து |
| ஆனை | பசுக்களை |
| மேய்த்தி | ஜாத்யுசிதவிர்த்தியினாலே ரக்ஷித்து |
| ஆ | ஆசிருதஸ்பர்சமுள்ள கோக்களுடைய |
| நெய் | கிருதத்தை |
| உண்டி | அமுதுசெய்தாய் |
| அன்று | இந்திரன்சிலாவர்ஷம்வர்ஷிப்பிக்கிறதசையிலே |
| குன்றமொன்றினால் | ஒருசமீபஸ்திதபர்வதத்தினாலே |
| ஆனைகாத்து | பசுக்களைரக்ஷித்து |
| மை | அஞ்சனாலங்கிருதமான |
| அரி | செவ்வரிகளையுடைய |
| கண் | திருக்கண்களையுடைத்தான |
| மாதரார் | நப்பின்னைப்பிராட்டியினுடைய |
| திறத்து | விஷயத்திலே |
| அன்று | முன் சென்று ஆனையடர்த்தளென்றந்வயம் |
| அன்று | அலங்கிருதையாய் சம்சிலேஷார்த்தமாகநிற்கிறஅன்று |
| முன்சென்று | நப்பின்னைப்பிராட்டியினுடைய சந்நிதியிலே நின்று |
| ஆனையடர்த்த | எருதுகளேழையுங்கொன்ற |
| மாயம் | ஆச்சரியம் |
| என்னமாயம் | என்ன ஆச்சரியம். (௬௰) |

ஆயனாகி யாயர்மங்கை வேயதோள் விரும்பினா
யாயநின்னை யாவர்வல்ல ரம்பரத்தோ டிம்பராய்
மாயமாய மாயைகொல்ல தன்றிநீவ குத்தலு
மாயமாய மாக்கினாயுன் மாயமுற்று மாயமே. (சக)

(இ - ள்.)

ஆயனாகியித்தியாதி

| | |
|---|---|
| ஆயனாகி | கோபஜாதியனாய்வைத்து |
| ஆயர்மங்கை | நப்பின்னைப்பிராட்டியினுடைய |
| வேய | மூங்கில்போலிருக்கும் |
| தோள் | தோளை |
| விரும்பினாய் | அத்தியாதரித்தாய் அம்பரத்தொடிம்பராய் யாவர்நின்னைக்காணவல்லரென்றந்வயம் காணவென்றநுஷங்கம் |
| அம்பரத்தோடு | உபரிதநலோகவர்த்திப்ர்ஹ்மாதிகளோடுகூடின |
| இம்பராய் | பூமிவர்த்திக்ஞானாதிகமனுஷியர்களிலே |
| யாவர் | ஆர் |
| ஆயநின்னை | சர்வசக்தியுக்தனானவுன்னை |
| காணவல்லர் | பரிச்சேதிக்கசக்தர் |
| மாய | ஆச்சரியசக்தியுக்தனே |
| மாய | துரத்யயாஎன்கிறமாயையினுடையசம்பந்தத்தாலுண்டான |
| மாயைகொல் | அக்ஞானத்தாலேயோ மாயாவயூநம்க்ஞானம்என்றுமாயாபதம் அக்ஞாநஸாமாந்யவாசியாய் தத்விசேஷமான அக்ஞானத்தைச் சொல்லுகிறது கிம்க்ஷேபெயாய்கொல் என்கிறவிதுவும்க்ஷேபவாசியாயிருக்கிறது |
| அதன்றி | அவதாரபரிச்சேதமாத்திரமன்றிக்கே |
| நீ | தயமாநமநாவானதேவர் |
| வகுத்தலும் | மஹதாதிசரீராந்தங்களான வகுப்புக்களைவகுத்தலும் |
| மாய | அந்தக்கரணகளேபரங்களைக்கொண்டு நல்வழியேபோகமாட்டாதே அந்யபரராய் நசிக்க |

| | |
|---|---|
| மாய்மாக்கிறாய் | ஸம்ஹாரமேக்ஷமமென்று காரணாவஸ்தமாக்கிறாய் |
| உன் | தேவருடைய |
| மாயமுற்றும் | ஸங்கல்பாத்மகக்ஞானங்களாலும் மாயாவயூநம |
| மாயமே | ஆச்சரியாவஹமே. (சுக) |

வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த புன்சடைக்
கீறுதிங்கள் வைத்தவன்கை வைத்தவன்க பான்மிசை
யூறுசெங் குருதியா னிறைத்தகா ரணந்தனை
யேறுசென் றடர்த்தவீச பேசுகூச மின்றியே. (சுஉ)

( இ - ள். )

வேறித்தியாதி

| | |
|---|---|
| வேறு | விலக்ஷணமாக |
| இசைந்த | ஸம்ஹார்த்துருத்வத்துக்குச்சேர்ந்த |
| செக்கர் | சிவந்த குருத்தமானவென்றபடி |
| மேனி | சரீரத்தையுடைய |
| நீறு | பஸ்மத்தாலே |
| அணிந்த | பூஷணமாகததரித்தவனாய் |
| புன் | புன்மை பொல்லாமையையுடைய |
| சடை | ஜடையையுடைய |
| கீறு | ரேகாமாத்திரமான |
| திங்கள் | சந்திரனை |
| வைத்தவன் | அந்தஜடையிலேதரித்தருத்திரனுடைய |
| கை | கையிலே |
| வைத்த | லக்நமான |
| வன் | பலிஷ்டமான துர்மோசமானவென்றபடி |
| கபால்மிசை | கபாலத்திலே |
| ஊறு | திருமேனியிலே ஊறுநின்றுள்ள |
| செம் | சிவந்த |
| குருதியால் | ரக்தஜலத்தாலே |
| நிறைத்த | பூரித்த |
| காரணந்தனை | ஹேதுவை |
| கூசமின்றியே | கூசமில்லாமலே |

| | |
|---|---|
| சென்று | மேல்விழுந்து |
| ஏறு | எருதுகளை |
| அடர்த்த | கொன்ற |
| ஈச | நிருபாதிகநியமநசீலனே |
| பேசு | அருளிச்செய்யவேணும் |

கூசமின்றியேபேசு என்னவுமாம் அவதாரகோபநத்தைப்பாரா தேஅருளிச்செய்யவேணும். (சுஉ)

வெஞ்சினத்த வேழவெண் மருப்பொசித் துருத்தமா
கஞ்சனைக் கடிந்துமண் ணளந்துகொண்ட காலனே
வஞ்சனத் துவந்தபேய்ச்சி யாவிபாலுள் வாங்கினாய்
அஞ்சனத்து வண்ணனாய வாதிதேவ னல்லையே. (சுங)

( இ - ள். )

வெஞ்சினத்தித்யாதி

| | |
|---|---|
| வெம் | உக்கிரமான |
| சினத்து | கோபத்தையுடைய |
| வேழம் | குவலயாபீடத்தினுடைய வழுவைவாரணம் வேழமென்னக்கடவதிறே |
| வெண் | வெளுத்த |
| மருப்பு | கொம்பை கோடுமருப்புமுலவையுங்கொம் பேஎன்னக்கடவதிறே |
| ஒசித்து | ஒடித்து |
| உருத்த | குருத்தனை சினமேயென்றுதொடங்கி உருத்தல்கோபமென்னக்கடவதிறே |
| மா | பிரகிருதியாமகாபலனான |
| கஞ்சனை | கம்ஸனை |
| கடிந்து | போக்கி வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவிபா லுள்வாங்கினாய் மண்ணளந்துகொண்டகா லனே யென்றந்வயம் |
| வஞ்சனத்து | வஞ்சனையாலே |
| வந்தபேய்ச்சி | தாய்போல்வந்தபூதனையினுடைய |
| ஆவி | பிராணனை |
| பாலுள் | பாலினுள்ளாலே |
| வாங்கினாய் | கிரஹித்தாய் |

| | |
|---|---|
| மண் | பூமியை விக்கிரமத்தாலேவாங்கிக்கொண்ட |
| அளந்துகொண்ட | அளவிட்டுக்கொண்ட |
| காலனே | திருவடிகளையுடையவனே காலனேயென்று மிருத்யுவாசியாய் பூபாராவதரணம்பண்ணினவனேயென்றுமாம் |
| அஞ்சனத்து | சியாமமான |
| வண்ணனாய | காந்தியையுடைய |
| ஆதி | காரணபூதனான |
| தேவன் | உஜ்வலன் |
| அல்லையே | அன்றோ, காளமஞ்சனமென்னக்கடவதிறே. |

பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின்ப சும்புறம்
போலுநீர்மை பொற்புடைத் தடத்துவண்டு விண்டுலா
நீலநீர்மை யென்றிவை நிறைந்தகால நான்குமாய்
மாலினீர்மை வையக மறைத்ததென்ன நீர்மையே. (சச)

( இ - ள். )

பாலித்தியாதி

| | |
|---|---|
| பாலினீர்மை | க்ஷீரத்தினுடைய நிறம்போலவிருக்கும் ச்வைத்யஸ்வபாவம் |
| செம் | சிவந்த |
| பொன் | காஞ்சனத்தினுடையநிறம்போலவிருக்கிற |
| நீர்மை | ரக்தவர்ணமாகிறஸ்வபாவம் |
| பாசியின் | சைவலத்தினுடைய |
| புறம் | பிரதேசத்தினுடைய |
| பசும் | பசுமை |
| போலுநீர்மை | சதுர்சமானஹரிதத்வமாகிறஸ்வபாவம் |
| பொற்புடை | அழகியதான |
| தடத்து | தடாகத்திலேயிருக்கிற |
| வண்டு | பிரமரங்கள் |
| விண்டு | சிறகுவிரித்து |
| உலா | பறவாநின்றுள்ள |
| நீலம் | கருநெய்தற்பூவினுடையநைலியமாகிற |
| நீர்மை | ஸ்வபாவத்தைப்போலவும் |
| என்றிவை | என்கிறவிவைகள் |
| நிறைந்த | பூர்ணமான |

| | |
|---|---|
| காலநான்குமாய் | கிருதாதியுகசதுஷ்டயநிர்வாஹகனுன |
| மாலினீர்மை | எம்பெருமானுடையஸலப்பியத்தை |
| வையகம் | பூலோகஸ்தர்கள் * மஞ்சா ஃ க்ரோசந்திதிவ |
| மறைத்தது | திரஸ்கரித்தது [து |
| என்னநீர்மை | என்னதுர்வாசநாஸ்வபாவம் க்ருதேசுக்ல ச்சதுர்பாகுகு திரேதாயாம் ரக்தவர்ணே சௌ துவாபரோபகவாந் சியாம ஃ கலௌ கிருஷ்ணம் த்விஷாம்கிருஷ்ணமித்தியாதிதி ருஷ்டவ்வியம் |
| பொற்பு | மஞ்சு கட்டழகாகுமென்னக்கடவது |
| நீலம் | பானல் காவி - கருங்குவளையென்னக்கடவ து. (சுச) |

மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொன்மண்ணுளேமயங்கிநின்
றெண்ணுமெண் ணகப்படாய்கொ லென்னமாய நின்றமா
கண்ணுளாய்கொல் சேயைகொல்ல னந்தன்மேற் கிடந்தவெம்
புண்ணியா புனந்துழா யலங்கலம்பு னீதனே. (சரு)

( இ - ள். )

| | |
|---|---|
| மண்ணுளாய்கொலித்தியாதி | |
| மண்ணுளாய் | லீலாவிபூதியிலே பிராகிருதஸஜாதீயனுயவ தரித்தவனே |
| கொல் | இதென்னுயிருக்கிறது |
| விண்ணுளாய் | பரமபதத்தில்வர்த்திகளான நித்யஸூரிகளு க்கு நிர்வாஹகனுயிராநின்றவனே |
| கொல் | இதென்னுயிருக்கிறது |
| மண்ணுளே | லீலாவிபூதியிலே |
| மயங்கிநின்று | விபரீதக்ஞாநங்களையுடையராய்வர்த்தித்து |
| எண்ணும் | பிரயோஜநாந்தரங்களையேசிந்தித்துக்கொ ண்டிருக்கிறஸம்ஸாரிகளுடைய |
| எண் | மநோரதத்துக்கு |
| அகப்படாய் | விஷயமன்றியிலேயிருக்கிறவனே |
| கொல் | இதென்னுயிருக்கிறது |
| நின்ற | நிலைபேறுன பிரபத்தியாகிய |

* விடாதலட்சணை.

| | |
|---|---|
| மா | பெருமையையுடைய |
| கண் | ஆசிருதர்பக்கல் |
| உளாய் | இருக்கிறவனே |
| கொல் | இதென்னாயிருக்கிறது |
| சேயை | ஆசிருதவிரோதிகளுக்குத்தூரஸ்தனாய் |
| கொல் | இதென்னாயிருக்கிறது |

சேய்என்று தூரத்துக்குப்பெயர் சேணிடையுஞ்சேய்த்துந்தூரமென்னக்கடவதிறே

| | |
|---|---|
| அனந்தன்மேற்கிடந்த | திருவனந்தாழ்வான்மேலேசாயந்தருளின |
| எம் | என்னுடைய |
| புண்ணியர் | என்னுடையஅநந்நியார்ஹசேஷத்வத்தையெனக்குணர்த்தினவனே |
| புனந்துழாயலங்கலம் | மாலாரூபேணவிநஸ்தமான திருத்துழாயிதழ்களையுடைய |
| புனிதனே | பரமபாவநனே |
| புனம் | நந்தவனத்திலேயிருக்கிற |
| துழாய் | துழாயினுடைய |
| அம் | அழகிய |
| அலங்கல் | மாலையையுடைய |
| புனிதனே | பரமபாவநனே |
| என்னமாயம் | என்ன ஆச்சரியம். (௬௫) |

தோடுபெற்ற தண்டுழா யலங்கலாடு சென்னியாய்
கோடுபற்றி யாழியேந்தி யஞ்சிறைப்புள் ளூர்தியா
லூடுபெற்ற நன்மைநண்ண மில்லையேனு நாயினேன்
வீடுபெற்றி றப்பொடும் பிறப்பறுக்கு மாசொலே. (௬௬)

( இ - ள். )

தோடித்தியாதி

| | |
|---|---|
| தோடு | கேசரங்கள் ஏடுந்தோடும்பூவினிதழென்னக்கடவது |
| பெற்ற | உடைய |
| தண் | சிரமஹரமான |
| துழாய் | திருத்துழாயினுடைய |

| | |
|---|---|
| அலங்கல் | திருமாலையானது |
| ஆடு | பிரணதர்பக்கல் முகப்பிரசாதத்தாலேயசைகிற |
| சென்னியாய் | திருவபிஷேகத்தையுடையவனே |
| கோடு | ஸ்ரீபாஞ்சஜன்யத்தை |
| பற்றி | தரித்து- கம்புகோடுசங்கெனப்படுமேயென்னக்கடவது. |
| ஆழி | திருவாழியாழ்வானை |
| ஏந்தி | தரித்து |
| அம் | அழகியதான |
| சிறை | திருச்சிறகையுடைய |
| புள் | பெரியதிருவடியை |
| ஊர்தி | நடத்தாநின்றாய் |
| ஆல் | அந்த துக்காதிசயத்யோதகம் |
| நாடு | அக்காலத்திருக்கும்லோகங்கள் |
| பெற்ற | லபித்த |
| நன்மை | பெரியதிருவடியைப்பெறக்கொண்டு சஞ்சரித்தஇந்தநன்மையை |
| நண்ணமில்லையேனும் | கிட்டப்பெற்றிலேனாகிலும் |
| நாயினேன் | திறந்தவாசல்கள்தோறுந்திரியும்பதார்த்தம்போலே அத்தியந்தாசுத்தியையுடையநான் |
| வீடு | மோக்ஷத்தை |
| பெற்று | லபித்து |
| இறப்பொடும் | இந்தச்சரீரவிமோசநத்தோடே |
| பிறப்பு | இனியொருசரீரப்பரிக்கிரகத்தை |
| அறுக்குமா | போக்கும் உபாயம் |
| சொல் | அருளிச்செய்யவேணும். (௬௬) |

காரொடொத்த மேனிநங்கள் கண்ணவிண்ணி னாதனே
நீரிடத்த ராவணைக் கிடத்தியென்ப ரன்றியு
மோரிடத்தை யல்லையெல்லை யில்லையென்ப ராதலாற்
சேர்விடத்தை நாயினேன் றெரிந்திறைஞ்சு மாசொலே. (௬௭)

( இ - ள். )

காரித்தியாதி

| | |
|---|---|
| காரொடு | காளமேகத்தோடு |
| ஒத்த | சதுர்சமான |
| மேனி | திருமேனியையுடைய |
| நங்கள் | அப்போதேயாசிருதருக்குஅநுபாவ்யமான |
| கண்ண | கிருஷ்ணனே |
| விண்ணினாதனே | நித்தியஸூரிகளுக்கநுபாவ்யனே |
| நீர் | க்ஷீராப்தியினுடைய |
| இடத்து | பிரதேசத்திலே |
| அராவணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| கிடத்தி | சுவேதத்வீபவாசிகளுக்கு அநுபாவ்யனும்படிகண்வளர்ந்தருளுகிறாய் |
| என்பர் | வேதவைதிகர் சொல்லுவர் |
| அன்றியும் | அதொழியவும் |
| ஓரிடத்தையல்லை | ஒருஇடத்திலேவர்த்திக்கிறாயல்லை சர்வகதனென்கை |
| எல்லையில்லை | தஹராதிவித்யைகளிலேசொல்லுகிற ஆசிரயணீயஸ்தலங்களுக்குப் * பரிச்சேதமில்லை தேசகாலவிப்பிரகர்ஷாதிக்ருதாதிகாரத்வ பிரதிபத்யவிஷயங்களாலே கீழச்சொன்ன |
| ஆதலால் | இவை ஆசிரயணீயஸ்தலமல்லாமையாலே |
| நாயினேன் | அதிஹீநனானான் |
| சேர்விடத்தை | ஆசிரயணீயஸ்தலத்தை |
| தெரிந்து | ஹிதமென்றுபுத்திபண்ணி |
| இறைஞ்சுமா | ஆசிரயிக்கலாம்படி |
| சொல் | அருளிச்செய்யவேணும். (௬எ) |

குன்றினின்று வானிருந்து நீள்கடற் கிடந்துமண்
ணொன்றுசென்ற தொன்றையுண்ட தொன்றிடந்து பன்றியாய்
நன்றுசென்ற நாளவற்று ணல்லுயிர் படைத்தவர்க்
கன்றுதேவ மைத்தளித்த வாதிதேவ னல்லையே. (௬அ)

( இ - ள். )

குன்றித்தியாதி

| | |
|---|---|
| குன்றினின்று | திருமலையிலேநின்று |
| வானிருந்து | பரமபதத்திலேயிருந்து |

---

* கணக்கில்லை என்பது.

| | |
|---|---|
| நீள் | அசங்குசிதமாக |
| கடல் | க்ஷீராப்தியிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளி |
| மண்ணொன்று | ஓர்மண்ணை பிரதானமானபூமியை |
| சென்று | நடந்து அளந்து அன்றிக்கே |
| மண் | பூமியிலே |
| ஒன்று | ஓரிடத்திலே |
| சென்று | அவதரித்தென்றுமாம் |
| அதொன்றை | பிரதானமானவந்தப்பூமியை |
| உண்டு | வயிற்றிலேவைத்து |
| பன்றியாய் | மகாவராகமாய் |
| அதொன்றிடந்து | பிரதானமான அந்தப்பூமியையுத்தரித்து |
| நன்று | மகாவராகஸாந்நித்தியத்தாலே நன்றாக |
| சென்றநாளவற்றுள் | கழிந்தநாளிலேவராஹகல்பத்திலேயென்றப |
| நல் | சாஸ்திராதிகாரத்திலேசிரேஷ்டரான [டி |
| உயிர் | மனுஷியர்களை |
| படைத்து | சிருஷ்டித்து |
| அவர்க்கு | அந்தமனுஷியர்களுக்கு |
| அன்று | ரஜஸ்தம பிராசுர்யகாலத்திலே |
| தேவு | ஆசிரயணீயதேவஜாதியை |
| அமைத்து | சிருஷ்டித்து |
| அளித்த | இப்படிப்பரஹிதங்களையேபிரவர்த்திப்பிக்கிற |
| ஆதி | காரணபூதனான |
| தேவன் | நிருபாதிகதேவன் |
| அல்லையே | அன்றோ. (சஅ) |

கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவுகூனிகூ
னுண்டைகொண்ட ரங்கவோட்டி யுண்மகிழ்ந்த நாதனூர்
நண்டையுண்டு நாரைபேர வாளைபாய நீலமே
யண்டைகொண்டு கெண்டைமேயு மந்தணீர ரங்கமே. (சக)

( இ - ள். )

கொண்டையித்தியாதி

| | |
|---|---|
| கொண்டை | மயிர்முடியிலே |
| கொண்ட | வைத்திருக்கிற |
| கோதை | மாலையினுடைய |

| | |
|---|---|
| மீது | மேலே |
| தேன் | பிரமரங்கள் |
| உலாவு | சஞ்சரியாநின்றுள்ள |
| கூனி | மந்தரையினுடைய |
| கூன் | முதுகில் |
| உண்டைகொண்டு | வில்லிலேயுண்டையைவைத்து |
| அரங்க | உள்ளேபுகும்படி |
| ஓட்டி | தெறித்து |
| உள்மகிழ்ந்த | மனஸந்துஷ்டனான |
| நாதனூர் | சக்கிரவர்த்திதிருமகன்வர்த்திக்கிறதேசம் |
| நண்டை | குளிரத்தை |
| உண்டு | தின்று |
| நாரை | நாரையானது |
| பேர | நடக்க |
| வாளை | மத்ஸ்யவிசேஷமானது |
| பாய | நாரையைக்கண்டுதுள்ள |
| நீலமே | கருநெய்தல்களை |
| அண்டைகொண்டு | அரணாகக்கொண்டு |
| கெண்டை | மத்ஸவிசேஷங்கள் |
| மேயும் | நிர்ப்பயமாகமேயாநின்றுள்ள |
| அம் | அழகியதாய |
| தண் | சிரமஹரமான |
| நீர் | ஜலசமுர்த்தியையுடைய |
| அரங்கமே | கோயிலே இதுஅனுபவத்தினுடையஆகாரம் |
| | இப்பாட்டில்பிரபந்தவிஷயம்ஸ்வாபதேசம். |

வெண்டிரைக் கருங்கடற் சிவந்துவேவ முன்னொர்நா
டிண்டிறற் சிலைக்கைவாளி விட்டவீரர் சேருமூர்
எண்டிசைக் கணங்களு மிறைஞ்சியாடு தீர்த்தநீர்
வண்டிரைத்த சோலைவேலி மன்னுசீ ரங்கமே. (௫௰)

( இ - ள். )

வெண்டிரையித்தியாதி

| | |
|---|---|
| வெண் | *வியதிவிக்ஷேபத்தாலேவெளுத்திருக்கிற |
| திரை | அலைகளையுடையதாய் |
| கரும் | கறுத்த |

*வியதி ஆகாயம்.

| | |
|---|---|
| கடல் | சமுத்திரமானது |
| சிவந்து | சராக்கினிதேஜஸாலேசிவந்து |
| வேவ | மறுகும்படி |
| முன்னொர்நாள் | இருபத்தெட்டாம்சதுர்யுகத்திலே |
| திண்வலி | திறல்வலி வீப்சைமிக்கவலியைக்காட்டுகிறது |
| சிலை | ஸ்ரீசார்ங்கத்தினின்றும் |
| கை | திருக்கைகளாலே |
| வாளி | சரத்தை |
| விட்ட | ஏவின |
| வீரர் | ஆண்பிள்ளையானசக்கிரவர்த் தித்திருமகன் |
| சேரும் | வர்த்திக்கிற |
| ஊர் | தேசம் |
| எண்டிசை | எட்டுத்திக்குக்களிலுமுள்ள |
| கணங்களும் | ஐசுவர்யார்த்தாதிசமூகங்களும் |
| இறைஞ்சி | திருவடிதொழுது |
| ஆடு | தீர்த்தமாடுகிற |
| தீர்த்தம் | பரிசுத்தியையுடைய |
| நீர் | நீரையுடைத்தாய் |
| வண்டு | பிரமரங்கள் |
| இரைத்த | பிரீதியதிசயித்தாலேசப்திக்கிற |
| சோலை | உத்தியானங்களை |
| வேலி | சூழவுடைத்தான |
| மன்னுசீர் | சீர்மன்னு |
| சீர் | பாவநத்வபோக்யத்வங்களாகிறகுணங்கள் |
| மன்னு | நித்தியமாகச்செல்லாநிற்கிற |
| அரங்கமே | கோயிலே. (௫0) |

சரங்களைத் துரந்துவில் வளைத்திலங்கை மன்னவன்
சிரங்கள்பத் தறுத்துதிர்த்த செல்வர்மன்னு பொன்னிடம்
பரந்துபொன் னிரந்துநுந்தி வந்தலைக்கும் வார்புன
லரங்கமென்பர் நான்முகத் தயன்பணிந்த கோயிலே. (௫௧)

( இ - ள். )

சரங்களையித்தியாதி

| | |
|---|---|
| வில் | ஸ்ரீசார்ங்கத்தை |
| வளைத்து | குனித்து-மண்டலீகரித்து |
| சரங்களை | பாணங்களை |

| | |
|---|---|
| துரந்து | நடத்தி-ஏவியென்றபடி |
| இலங்கை | லங்கைக்கு |
| மன்னவன் | ராஜாவான்ராவணனுடைய |
| சிரங்கள்பத்து | பத்துத்தலைகளை |
| அறுத்து | சேதித்து |
| உதிர்த்த | விழப்பண்ணின |
| செல்வர் | வீரஸ்ரீமான் |
| மன்னு | நித்தியவாசம்பண்ணுகிற |
| பொன் | ஸ்பிரஹணீயமான |
| இடம் | பிரதேசம் |
| இரந்து | அத்தியபிநிவேசத்தைப்பண்ணி |
| பரந்துவந்து | விஸ்திருதையாய்விச்சேதமில்லாமல்வந்து |
| பொன் | சுவர்ணத்தை |
| நுந்தி | கோயிலிலேதள்ளி |
| அலைக்கும் | அலையாநின்றுள்ள |
| வார்புனல் | பிரவாகரூபமானஜலத்தையுடைய.திருக்காவேரியினுடையவென்றபடி |
| நான்முகத்து | சதுர்முகனை |
| அயன் | பிரமாவானவன் |
| பணிந்த | ஆசிரயிக்கும் |
| கோயிலே | கோயிலையே |
| அரங்கமென்பர் | ரங்கஇத்யபீதியதே என்றுசொல்லுவார்கள் புராணவித்துக்கள் என்றுவிசேஷம். (ருக) |

பொற்றையுற்று முற்றல்யானை போரெதிர்ந்து வந்ததைப்
பற்றியுற்று மற்றதன் மருப்பொசித்த பாகனூர்
சிற்றெயிற்று முற்றன்மூங்கின் மூன்றுதண்ட மொன்றின
ரற்றபற்றர் சுற்றிவாழு மந்தணீர ரங்கமே. (ரு௨)

( இ - ள். )

பொற்றையித்தியாதி

| | |
|---|---|
| பொற்றை | கற்பாறையிலேயென்னுதல் கடுங்காட்டிலேயென்னுதல் பிறங்கல் பொற்றையென்னக்கடவது பொற்றைகடறு காந்தாரமென்னக்கடவது |
| உற்று | வர்த்தித்து |

| | |
|---|---|
| முற்றல் | திருடமான |
| யானை | குவலயாபீடம் |
| போரெதிர்ந்து | யுத்தத்திலேயெதிர்த்து |
| வந்ததை | வந்தத்தை |
| பற்றி | கையாலேபற்றி |
| உற்று | பாதவிவரங்களிலேநுழைந்து |
| மற்று | அதுக்குமேலே |
| அதன் | அந்தக்குவலயாபீடத்தினுடைய |
| மருப்பை | கொம்பை |
| ஒசித்த | முறித்த |
| பாகன் | ஹஸ்திபகன்போலிருக்கிறகிருஷ்ணன் |
| ஊர் | வர்த்திக்கிறதேசம் |
| சிற்று | சிறுகின |
| எயிற்று | தந்தங்கள்போலிருக்கிற கணுக்களையுடைய தாய் |
| முற்றல் | திண்ணியதான |
| மூங்கில் | வேணுவினுடைய |
| மூன்றுதண்டர் | தண்டத்திரயத்தையுடையசந்நியாசிகள் |
| ஒன்றினர் | பகவத்விஷயத்திலேகாந்தமான இருதயரானவர்கள் |
| அற்ற | புருஷார்த்தாந்தரசாதனாந்தரங்களின்றிக்கே |
| பற்றர் | எம்பெருமானேதஞ்சமென்றுபற்றுமவர்கள் |
| சுற்றி | சர்வாவஸ்தைகளிலுங் கோயில்வாசமேவாழ்வாகநினைத்து– சுற்றல்நினைத்தல் சூழ்தலுமாம் |
| வாழும் | ஹிருஷ்டராய் நித்தியவாசம்பண்ணுகிற்கிற |
| அம் | அழகிதான |
| தண் | குளிர்த்தியையுடைய |
| நீர் | ஜலசமுர்த்தியையுடைய |
| அரங்கமே | கோயிலே. (ருஉ) |

மோடியோடி லச்சையாய சாபமெய்தி முக்கணுன்
கூடுசேனை மக்களோடு கொண்டுமண்டி வெஞ்சமத்
தோடவாண னாயிரங்க ரங்கழித்த வாதிமால்
பீடுகோயில் கூடுநீர ரங்கமென்ற பேரதே. (ருங)

(இ - ள்.)

மோடியித்தியாதி

இலச்சையாயசாபமெய்திமோடியோடென்றந்வயம்

| | |
|---|---|
| இலச்சையாய | சாத்விகர்க்குத்தர்சநமேதொடங்கி லஜ்ஜையாம்படி |
| சாபம் | சாத்விகர்பரிக்கிரஹ்யதையாகிறசாபத்தை |
| எய்தி | பிராபித்து |
| மோடியோடு | க்ஷுத்திரதேவதாவிசேஷத்தோடேகூட காடுகொள்மோடிகாரிதாய் கொற்றிமாரிசூரியென்னக்கடவது அன்றிக்கே இலச்சையாயசாபமெய்திமுக்கணன்மோடியோ டென்றந்வயம் |
| இலச்சையாய | லஜ்ஜாவஹமான |
| சாபம் | பிரமசாபத்தை |
| எய்து | பிராபித்து |
| முக்கணன் | ஈசுராபிமானத்துவசூசகமானநேத்திரத்திரையத்தையுடையருத்திரன் |
| மோடியோடு | க்ஷுத்திரதேவதா விசேஷத்தோடேமக்களோடுகூடுசேனைகொண்டு வெஞ்சமத்துமண்டியோடவென்றந்வயம் |
| மக்களோடு | ஸ்வஜனங்களோடுகூட |
| கூடு | திரண்ட |
| சேனை | சேனையை |
| கொண்டு | அழைத்துக்கொண்டு |
| வெஞ்சமத்து | யுத்தத்திலே |
| மண்டி | ஓடுகையிலே-அத்தியாசக்தியைப்பண்ணி |
| ஓட | புறங்காட்டியோடும்படி |
| வாணன் | பாணாஸுரனுடைய |
| ஆயிரங்கரம் | புஜஸகஸ்திரத்தை |
| கழித்த | சேதித்த |
| ஆதி | காரணபூதனான |
| மால் | ஸ்ரீகிருஷ்ணன் நித்தியவாசம்பண்ணுகிற கூடுநீரரங்கமென்றபேரதேபீடுகோயிலென்றந்வயம் |
| கூடுநீர் | திருக்காவேரியும் வர்ஷஜலமுங்கூடினநீரையுடைத்தான |

| | |
|---|---|
| அரங்கமென்றபேரது | திருவரங்கமென்னுந் திருநாமத்தையுடைய |
| பீடுகோயில் | பெரியகோயில் |
| பீடு | பெரிய |
| கோயில் | வாசஸ்தானம். (௫௩) |

இலைத்தலைச் சரந்துரந்தி லங்கைகட் டழித்தவன்
மலைத்தலைப் பிறந்திழிந்து வந்துநுந்து சந்தனங்
குலைத்தலைத் திறுத்தெதிர்ந்த குங்குமக் குழம்பினோ
டலைத்தொழுகு காவிரிய ரங்கமேய வண்ணலே. (௫௪)

(இ - ள்.)

இலையித்தியாதி

| | |
|---|---|
| இலை | இலைபோலிருக்கிற |
| தலை | நுனியையுடைய |
| சரம் | திருச்சரங்களை |
| துரந்து | ஏவி |
| இலங்கை | லங்கையினுடைய |
| கட்டு | அரணை |
| அழித்தவன் | அழியச்செய்ததசரதாத்மஜன் |
| மலை | சஹ்யபர்வதத்தினுடைய |
| தலை | கொடுமுடியிலே-தாழ்வரையிலேயென்றுமாம் |
| பிறந்து | உத்பன்னமாய் |
| இழிந்து | வர்ஷத்திலேபறியுண்டுஅந்நீரோடேயிழிந்து |
| வந்து | திருக்காவேரியிலேவந்து |
| நுந்து | தள்ளாநின்றுள்ள |
| சந்தனம் | சந்தனவிருக்ஷங்களை |
| குலைத்து | குலுங்கச்செய்து |
| அலைத்து | ஆட்டியலைத்து |
| இறுத்து | ஒடித்து |
| எதிர்ந்த | ஒன்றோடொன்றெதிர்ப்பட்ட |
| குங்குமம் | குங்குமலதாவிதாநத்தினுடைய |
| குழம்பினோடு | பராகபங்கத்தோடுகூட-கலங்கலோடேகூட |
| அலைத்தொழுகு | அலைத்துக்கொண்டுவாராநின்றுள்ள |
| காவிரி | திருக்காவேரியையுடைய |

| | |
|---|---|
| அரங்கமேய அண்ணலே | கோயிலிலேநித்தியவாசம்பண்ணுகிற்கிற ஸ்வாமீ தசரதாத்மஜன் அரங்கமேய அண்ணலென்றும்உத்தேசவிதேயபாவேந யோஜிக்கக்கடவது கோயிலுக்குஆர்த்தபிரதாந்யம் விவக்ஷிதம். (ருச) |

மன்னுமா மலர்க்கிழத்தி வையமங்கை மைந்தனுய்ப்
பின்னுமாயர் பின்னைதோண் மணம்புணர்ந்த தன்றியு
முன்னபாத மென்னசிந்தை மன்னவைத்து நல்கினுய்
பொன்னிசூ ழரங்கமேய புண்டரீக னல்லையே. (ருரு)

( இ - ள். )

| | |
|---|---|
| மன்னித்தியாதி மா | மாமலர்மன்னுகிழத்தியென்றந்வயம் சைத்தியசௌகந்திய சௌகுமாரியங்களாலேமகத்தான |
| மலர் | தாமரைப்பூவிலே |
| மன்னு | பிறப்பையுடையளாய் |
| கிழத்தி | ஜகத்ரக்ஷணத்துக்குரியளான பெரியபிராட்டியென்ன கிழவருரியோர்முதுவொன்னக்கடவது பெண்ணைச்சொல்லும்போதுகிழத்திஉரியாளென்றுகிடக்கிறது |
| வையமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டியென்ன அன்றிக்கே மங்கையென்று பருவத்தைச்சொல்லுத்தாயுநித்தியயுவதியென்றுமாம் |
| மைந்தனுய் | நித்தியயுவாவானகாந்தனுய் |
| பின்னும் | அதுக்குமேலே |
| ஆயர் | கோபஸஜாதீயையாயவதரித்த [ய |
| பின்னை | நீளாதேவியான நப்பின்னைப்பிராட்டியுடை |
| தோள் | புஜங்களை |
| மணம்புணர்ந்தது | கலந்ததை |
| அன்றியும் | அல்லாமலும் |
| பின்னும் | அதுக்குமேலே |
| உன்னபாதம் | உன்னுடையதிருவடிகளை |
| என்னசிந்தை | என்னுடையஹிருதயத்திலே |
| மன்ன | விசிலேஷமில்லாமல் |

| | |
|---|---|
| வைத்து | ஸ்தாபித்து |
| நல்கினாய் | மகோபகாரத்தைப்பண்ணினாய் |
| பொன்னி | திருக்காவேரியாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| அரங்கமேய | கோயிலிலேநித்தியவாசம்பண்ணுகிற்கிற |
| புண்டரீகனல்லையே | புண்டரீகாவயவனல்லையே புண்டரீகசதுருசாவயவப்ராசுர்யத்தாலே புண்டரீகனென்றுசொல்லுகிறது. (ருரு) |

இலங்கைமன்ன னைந்தொடைந்து பைந்தலை நிலத்துகக்
கலங்கவன்று சென்றுகொன்று வென்றிகொண்ட வீரனே
விலங்குநூலர் வேதநாவர் நீதியான கேள்வியார்
வலங்கொளக் குடந்தையுட் கிடந்தமாலு மல்லையே. (ருசு)

( இ - ள். )

இலங்கையித்தியாதி

| | |
|---|---|
| இலங்கை | லங்கைக்கு |
| மன்னன் | அத்தியக்ஷனைராவணனுடைய |
| ஐந்தொடைந்து | பத்து |
| பைந்தலை | பலிஷ்டமானதலைகள் |
| நிலத்து | பூமியிலே |
| உக | விழ |
| கலங்க | க்ஷுப்தமாகும்படி |
| அன்று | அவனுக்கு வரப்பிரதானம்பண்ணின தேவதைகளை அவன்நலியும்போது |
| சென்று | ஜநஸ்தானத்தையழித்துத் திருவணையுமிட்டு லங்காசமீபத்திலேபோய் |
| கொன்று | அவனைவதைத்து |
| வென்றி | விஜயத்தை |
| கொண்ட | லபித்த |
| வீரனே | ஆண்புலியானவனே |
| விலங்கு | சரீரத்திலே |
| நூலர் | யக்ஞோபவீதத்தையுடையராய் |
| வேதம் | வேதங்களை |
| நாவர் | நாக்கிலேயுடையவர்களாய் |

| | |
|---|---|
| நீதியான | நியாயமான |
| கேள்வியார் | உபதேசத்தையுடையரானபிராமணருடைய |
| வலம் | அநுகூலவிர்த்தியை |
| கொள | ஸ்வீகரிக்கைக்காக |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மால் | சர்வேசுவரன் |
| அல்லையே | அன்றோ. (ருசு) |

சங்குதங்கு முன்கைநங்கை கொங்கைதங்க லுற்றவ
னங்கமங்க வன்றுசென் றடர்த்தெறிந்த வாழியான்
கொங்குதங்கு வார்குழன் மடந்தைமார் குடைந்தநீர்ப்
பொங்குதண் குடந்தையுட் கிடந்தபுண்ட ரீகனே. (ருஎ)

( இ - ள். )

சங்கித்தியாதி

| | |
|---|---|
| சங்கு | கைவளை |
| தங்கு | நிற்கிற |
| முன்கை | முன்கையையுடைய |
| நங்கை | ரூபாத்மகுணங்களாலே பூர்ணமானபிராட்டிபக்கலிலே |
| கொங்கை | திருமுலைத்தடத்திலே |
| தங்கல் | தொங்கலை |
| உற்றவன் | நினைத்தராவணனுடைய |
| அங்கம் | சரீரம் |
| மங்க | மங்குகைக்காக |
| அன்று | வெண்யுக்ரதந்தசையிலே |
| சென்று | கடற்கரையிலேசென்று |
| அடர்த்து | அடைமதிட்படுத்தி |
| எறிந்த | அவன்றலையையறுத்த |
| ஆழியான் | கடல்போலேசிரமஹரமான திருமேனியையுடையவன் |
| கொங்கு | மலர்த்தாதுகள் |
| தங்கு | நிற்கிற |
| வார் | நீண்டிருக்கிற |

| | |
|---|---|
| குழல் | அளகத்தையுடைய |
| மடந்தைமார் | ஸ்திரீகள் |
| குடைந்த | அவகாகித்த |
| நீர் | ஜலமானது |
| பொங்கு | மிகுந்து |
| தண் | சிரமஹரமான |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| புண்டரீகன் | புண்டரீகசதருசமானவதனநயன நாபிகர சரணத்தையுடையவன் |
| அல்லையே | அன்றே. (௫௭) |

மரங்கெட நடந்தடர்த்து மத்தயானை மத்தகத்
துரங்கெடப் புடைத்தொர்கொம் பொசித்துகந்த வுத்தமா
துரங்கம்வாய் பிளந்துமண் ணளந்தபாத வேதியர்
வரங்கொளக் குடந்தையுட் கிடந்தமாலு மல்லையே. (௫௮)

(இ - ள்.)

மரங்கெடவித்தியாதி

| | |
|---|---|
| மரம் | யமளார்ஜ்ஜுநங்கள் |
| கெட | நசிக்கும்படி |
| நடந்து | நடைகற்று தவழ்ந்தென்றபடி |
| அடர்த்து | மதம்போம்படிநெருக்கி |
| மத்த | மதித்த |
| யானை | குவலயாபீடத்தினுடைய |
| மத்தகத்து | மஸ்தகத்திலே |
| உரம் | வலி |
| கெட | நசிக்கும்படி |
| புடைத்து | குதித்து |
| ஓர் | அத்விதீயங்களான |
| கொம்பு | தந்தங்களை |
| ஒசித்து | முறித்து |
| உகந்த | ஹிருஷ்டனான |
| உத்தமா | புருஷோத்தமனே |
| துரங்கம் | கேசியினுடைய |

| | |
|---|---|
| வாய் | முகத்தை |
| பிளந்து | கிழித்து |
| மண்ணளந்த | மஹாபலிபக்கலினின்றும் பூமியைஸ்ரீவாமநனுயவதரித்தளந்துகொண்ட |
| பாத | திருவடிகளையுடையவனேநீயென்றுசேஷம் |
| வேதியர் | வேதார்த்ததாத்பரியங்கைப்பட்டவர்கள் |
| வரங்கொள் | தந்தாமபேக்ஷிதங்களையுன்பக்கலிலே அபேக்ஷிக்கலாம்படி |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மால் | வியாமுக்தன் |
| அல்லையே | அன்றோ |

திருக்குடந்தைக்கு ஆர்த்தப்பிரதாங்யம். (ருஅ)

சாலிவேலி தண்வயற் றடங்கிடங்கு பூம்பொழிற்
கோலமாட நீடுதண் குடந்தைமேய கோவலா
காலநேமி வக்கிரன் கரன்முரன் சிரமவை
காலனோடு கூடவிற் குனித்தவிற்கை வீரனே. (ருகூ)

( இ - ள். )

சாலியித்தியாதி

| | |
|---|---|
| சாலி | செந்நெல்லை |
| வேலி | சுற்றுமுடைய |
| தண் | சிரமஹரமான |
| வயல் | கேதாரங்களென்ன |
| தடம் | அதுக்குள்ளேவிஸ்தீர்ணையான |
| கிடங்கு | அகழென்ன |
| பூம் | அதுக்குள்ளேபுஷ்பிதங்களான |
| பொழில் | உத்தியானங்களென்ன இவைகளையுடைத்தான |
| கோலம் | தருசநீயமான |
| மாடநீடு | நீடுமாடமென்றுகூட்டி |
| நீடு | உந்நதமான |
| மாடம் | கிரகங்களையுடைத்தான |
| தண் | சிரமஹரமான |

| | |
|---|---|
| குடந்தைமேய | திருக்குடந்தையிலே நித்யவாஸம்பண்ணு கிற |
| கோவலா | கிருஷ்ணனே |
| காலநேமி | காலநேமியென்ன |
| வக்கிரன் | தந்தவக்கிரனென்ன |
| கரன் | குரூரனை |
| முரன் | முரனென்னஇவர்களுடைய |
| சிரமவை | சிரஸுக்களை அறுத்துஅன்று அத்தியாஹாரம் |
| காலனோடு | மிருத்யுவோடே |
| கூட | கூடும்படி |
| வில் | ஸ்ரீசார்ங்கத்தை |
| குனித்த | வளைத்த |
| வில் | ஸ்ரீசார்ங்கத்தை |
| கை | திருக்கையிலேயுடைய |
| வீரனே | ஆண்புலியே (ருக) |

செழுங்கொழும் பெரும்பனி பொழிந்திட வுயர்ந்தவேய்
விழுந்துலர்ந் தெழுந்துவிண் புடைக்கும்வேங் கடத்துணின்
றெழுந்திருந்து தேன்பொருந்து பூம்பொழிற்றழைக்கொழுஞ்
செழுந்தடங் குடந்தையுட் கிடந்தமாலு மல்லையே. (கூ0)

(இ - ள்.)

| | |
|---|---|
| செழுமித்தியாதி | |
| செழுங்கொழும் | ஸ்தூலதாரைகளாய்விழுகிற செழுங்கொழும்சப்தங்கள் ஸ்பீதவாசிகளாய் வீப்சையாலேஅதிசயத்தைக்காட்டிற்று |
| பெரும்பனி | மூடுபனி |
| பொழிந்திட | சொரிய |
| உயர்ந்தவேய் | உந்நதங்களானமூங்கிலானவைகள் |
| விழுந்து | அந்தப்பனிக்கனத்தாலேதறையிலேசாய்ந்து |
| உலர்ந்து | அனந்தரம் சூரியகிரணங்களாலேஉலர்ந்து |
| எழுந்து | கிளம்பி |
| விண் | ஆகாசத்திலே |

| | |
|---|---|
| புடைக்கும் | கிட்டும் அன்றிக்கே செழுங்கொழும் உயர்ந்தவேய் பெரும்பனிபொழிந்திடவிழுந்துலர்ந்துளழுந்துவிண்புடைக்கும் வேங்கடமென்றந்வயித்து |
| செழும் | பீநங்களாய் |
| கொழும் | ஸ்பீதங்களாய் |
| உயர்ந்த | உந்நதங்களானவித்தியாதிபூர்வவத் |
| வேங்கடத்துள் | திருமலையிலே |
| நின்று | நின்றுகொண்டு |
| தேன் | வண்டுகளானது |
| எழுந்து | கிளர்ந்து |
| இருந்து | திரும்பவும்படிந்து |
| பொருந்து | வர்த்திக்கிற |

தழை தழைக்கொழும்பூம்பொழிலென்றந்வயம்

| | |
|---|---|
| தழை | சாகோபசாகங்களாய் |
| கொழும் | சிரத்தையையுடைத்தாய் |
| பூம் | புஷ்பிதங்களாலே |
| பொழில் | உத்தியானங்களையுடைய |
| செழும் | சௌந்தரியத்தாலேஸ்பீதங்களான |
| தடம் | தடாகங்களையுடைய |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மால் | ஆசிருதர்பக்கல்வியாமுக்தன் |
| அல்லையே | அன்றோ. (௬௰) |

நடந்தகால்க ணொந்தவோ நடுங்குஞால மேனமா
யிடந்தமெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரங்
கடந்தகால் பரந்தகா விரிக்கரைக் குடந்தையுட்
கிடந்தவா றெழுந்திருந்து பேசுவாழி கேசனே. (௬௧)

( இ - ள். )

நடந்தவித்தியாதி

| | |
|---|---|
| நடந்த | உலகளந்த |
| கால்கள் | திருவடிகள் |
| நொந்தவோ | நோவுபட்டதுபொறுமையோ அன்றியே |

| | |
|---|---|
| நடந்த | சக்கிரவர்த்தித்திருமகனுய் காட்டிலும்மலை யிலும்நடந்த |
| கால்கள் | திருவடிகள் |
| நொந்தவோ | நோவுபட்டதுபொருமையோவென்றுமாம் |
| நடுங்கு | காவற்சோர்வாலே நடுங்குகிற |
| ஞாலம் | பூமியை |
| ஏனமாய் | மஹாவராகமாய் |
| இடந்த | அண்டபித்தியிலே புக்கு இடந்த |
| மெய் | திருமேனியிலே |
| குலுங்கவோ | ஆடோபத்தாலேவந்தஆலஸ்யத்தாலேயோ |
| விலங்கு | நீர்வரவொண்ணுதபடியிருவிலங்கான |
| மால்வரை | பெருமலைகளென்ன |
| சுரம் | அருநெறிகளென்ன இதுகளை |
| கடந்த | லங்கித்த |
| கால்பரந்த | பரந்தசாரிணியையுடைத்தான |
| காவிரி | திருக்காவேரியினுடைய |
| கரை | கரையிலே |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்தவாறு | கண்வளர்ந்தருளுகிறபிரகாரத்தை |
| எழுந்திருந்து | உர்த்திதனுய்க்கொண்டு |
| பேசு | அருளிச்செய்யவேணும் இனியப்படி அருளிச்செய்யாமையாலே ஆயுஷ்மன் என்னுமாப்போலேமங்களாசாசனம்பண்ணுகிறுர்வாழியென்று |
| கேசனே | கேசவனே வகராமில்லாமையாலே இடைக்குறைத்தலாய்க்கிடக்கிறது அன்றிக்கே |
| கேசனே | கேசோஸ்யாஸ்திதிகேச அற்ச ஆதித்வாத்சிஶோபிரசம்சாயாயெனுருய்க் கிடக்கிறது என்னவுமாம் |
| கேசவ | என்னுமது கேசஎன்றுகிடக்கிறபோது கேசார்த்வோஙியாதரஸ்யாமிதி பிரசம்ஸயாம் மத்வற்தீயப்பிர்த்யயாந்தமாய் கிடக்கிறது இரண்டுக்கும் * ஸிநிக்த குடில குந்தள னென்ன அர்த்தமென்றருளிச்செய்வர் (கூக) |

* சிநிக்த்தம் மின்னல் குடிலம் வக்கிறம் குந்தளம் முன்னெத்திமயிர்

கரண்டமாடு பொய்கையுட் கரும்பனைப் பெரும்பழம்
புரண்டுவீழ வாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய்
திரண்டதோ ளிரணியன் சினங்கொளாக மொன்றையு
மிரண்டுகூறு செய்துகந்த சிங்கமென்ப துன்னையே. (௬௨)

( இ - ள். )

கரண்டமித்தியாதி

| | |
|---|---|
| கரண்டம் | நீர்க்காக்கைகளாவன |
| ஆடு | நடையாடாநிற்கிற அன்றிக்கே -நீராடாநிற்கிற-முழுகாநிற்கிறவெனறபடி |
| பொய்கையுள் | ஸரஸ்ஸுக்களிலேதடாகம் |
| கரும் | கறுத்திருக்கிற |
| பனை | தாலவிருக்ஷங்களுடைய |
| பெரும் | பெருத்திருக்கிற |
| பழம் | பழங்களானவைகள் |
| புரண்டுவீழ | நீரிலேயுருண்டுவிழ |
| வாளை | மத்ஸ்யங்களானவைகள் |
| பாய் | பனம்பழத்தை நீர்க்காக்கையாகக்கருதி அஞ்சிப்பாயாநின்றுள்ள |
| குறுங்குடி | திருக்குறுங்குடியிலேயிருக்கிற |
| நெடும் | தீர்க்கமான |
| தகாய் | இயல்பையுடையவனே ஸௌந்தர்யஸௌகுமார்யாதிகளாகிற மஹாஸ்வபாவத்தையுடையவனேயென்றபடி |
| திரண்ட | திரட்சியையுடைத்தான ஸ்பீதமானவென்றபடி |
| தோள் | புஜங்களையுடைத்தான |
| இரணியன் | ஹிரண்யனுடைய |

சினங்கொளாகமொன்றையும்

| | |
|---|---|
| சினம் | குரோதத்தை |
| கொள் | கொள்ளாநின்றுள்ள ஆந்தரக்ரோதசூசகமானவென்றபடி |
| ஆகமொன்றையும் | ஒருசரீரத்தையும் |
| இரண்டுகூறுசெய்து | இரண்டுபாகம்பண்ணி |

| | |
|---|---|
| உகந்த | செருக்கினுடைய ஆசிருதவிரோதிநிரஸநம் பண்ணினோமேயென்று இருஷ்டனான |
| சிங்கமென்பது | நரஸிம்ஹமென்றுபிரமாணங்கள்சொல்லுவது |
| உன்னையே | உன்னைத்தானோவென்று ஏகாரம்வியப்பு அதாவதுவிஸ்மயவாச்யேவகாரமென்றபடி.() |

நன்றிருந்தி யோகநீதி நண்ணுவார்கள் சிந்தையுட்
சென்றிருந்து தீவினைக டீர்த்ததேவ தேவனே
குன்றிருந்த மாடநீடு பாடகத்து மூரகத்து
நின்றிருந்து வெஃகணைக் கிடந்ததென்ன நீர்மையே. (கூரு)

(இ - ள்.)

| | |
|---|---|
| நன்று | நன்றாக |
| இருந்து | யோகாப்பியாஸோசிதமான ஆசனத்திலேயிருந்து |
| யோகநீதி | |
| யோகம் | தியானயோகமாகிற |
| நீதி | உபாயத்தாலே |
| நண்ணுவார்கள் | கிட்டவேணுமென்றிருக்கிறவர்களுடைய உன்னைலபிக்கவேணுமென் றிருக்கிறவர்களுடையவென்றபடி |
| சிந்தையுள் | இருதயத்திலே |
| சென்றுஇருந்து | அடைந்துஇருந்து அவர்களுடையஇருதயம் அநாதிகாலம்விஷயாந்தரப்பிரவணமென்று குத்தியாதேயிருந்து |
| தீவினைகள்தீர்த்த | குரூரங்களானஅநுபவவிரோதிகளானபாபங்களைப்போக்கும் |
| தேவதேவனே | நித்தியசூரிநிர்வாஹகனே |
| குன்று | மலைகள்போலே |
| இருந்த | இராநின்றுள்ள ஓங்கியிருந்துள்ளவென்றபடி |
| மாடம் | கிரகங்களையுடைத்தான |
| நீடு | இடமுடைத்தான |
| பாடகத்தும் | திருப்பாடகத்திலும் |

| | |
|---|---|
| ஊரகத்தும் | கீழ்ச்சொன்னவிசேஷணமிங்கும்வரும் அப்படியிருந்துள்ளதிருவூரகத்திலும் |
| நின்றிருந்து | இங்குயதாக்கிரமமன்றிக்கே புத்திஸ்தக்கிரமத்தாலே திருப்பாடகத்திலிருந்தும் திருவூரகத்தினின்றும் |
| வெஃகணைக்கிடந்தது | திருவெஃகாவிலேகண்வளர்ந்தருளினவிது |
| என்னநீர்மை | என்னசௌலப்பியம். (சுங) |

நின்றதெந்தை யூரகத் திருந்ததெந்தை பாடகத்
தன்றுவெஃ கணைக்கிடந்த தியானிலாத முன்னெலாம்
அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலே
னின்றதும் மிருந்ததுங் கிடந்ததுமென் னெஞ்சுளே. (சுச)

( இ - ள். )

| | |
|---|---|
| எந்தை | எனக்குஸ்வாமியானவன் |
| ஊரகத்து | திருவூரகத்திலே |
| நின்றது | நின்றருளினதும் |
| எந்தை | எனக்குஸ்வாமியானவன் |
| பாடகத்து | திருப்பாடகத்திலே |
| இருந்தது | எழுந்தருளியிருந்ததும் |
| அன்று | கீழ்ச்சொன்ன இரண்டுதிருப்பதிகளிலும் ருசிபிறந்தஅன்று |
| வெஃகணைக்கிடந்தது | திருவெஃகாவிலேகண்வளர்ந்தருளினதும் |
| யானிலாத | நானபிமுகனாகாத |
| முன்னெலாம் | முற்காலமெல்லாம் |
| அன்று | அக்காலத்திலே |
| நான்பிறந்திலேன் | ஞானலாபத்தால்பிறக்கப்பெற்றிலேன் |
| பிறந்தபின் | ஞானலாபத்தால்பிறந்தபின் |
| மறந்திலேன் | விஸ்முருதியுடையேனல்லேன் |
| | நின்றதுமித்தியாதி இங்கேஎந்தையென்று அநுஷங்கம் |
| எந்தை | என்னுடையஸ்வாமியானவன் |
| நின்றதுமிருந்ததுங் கிடந்ததும் | கீழ்ச்சொன்னதிருப்பதிகளிற்செய்தசெயல்களெல்லாம் |
| என்னெஞ்சுளே | என்னுடையஇருதயத்திலேயென்றபடி. () |

நிற்பதும்மொர் வெற்பகத் திருப்பவிண் கிடப்பதும்
நற்பெருந் திரைக்கடலு ளுனிலாத முன்னெலாம்
அற்புத னனந்தசய னாதிபூதன் மாதவன்
நிற்பதும் மிருப்பதுங் கிடப்பதுமென் னெஞ்சுளே. (சரு)

(இ - ள்.)

நிற்பதுமித்தியாதி

| | |
|---|---|
| ஓர் | அத்விதீயமான |
| வெற்பகத்து | மலையினிடத்து-அதாவது திருமலையிலேயெ ன்றபடி |
| நிற்பதும் | நின்றருளுகிறதும் |
| விண் | பரமபதமாகிறவாகாசத்திலே |
| இருப்ப | இருந்தருளுகிறதும் |
| நல் | நன்றாய் |
| பெரும் | பெருத்திருக்கிற |
| திரை | அலைகளையுடைய |
| கடலுள் | திருப்பாற்கடலிலே |
| கிடப்பதும் | கண்வளர்ந்தருளுகிறதும் |
| நானிலாதமுன்னெலாம் | நான்முறையறியாதேஅசத்கல்பனாய்க்கிடந் தமுற்காலமெல்லாம் |
| அற்புதன் | ஞானசக்தியாதிகளாலாச்சரியபூதனாய் |
| அனந்தசயனன் | அனந்தசாயியாய் |
| ஆதிபூதன் | சகத்காரணபூதனான |
| மாதவன் | ஸ்ரீயப்பதியானவன் |
| நிற்பதுமிருப்பதுங் கிடப்பதும் | கீழ்ச்சொன்னதிருமலைபரமபதம் திருப்பா ற்கடலிவற்றிலே செய்தருளினசெயலைச்செ ய்வது |
| என்னெஞ்சுளே | என்னுடையஇருதயத்திலேயென்றபடி. () |

இன்றுசாத னின்றுசாத லன்றியாரும் வையகத்
தொன்றிநின்று வாழ்தலின்மை கண்டுநீச ரென்கொலோ
அன்றுபா ரளந்தபாத போதையுன்னி வானின்மேற்
சென்றுசென்று தேவரா யிருக்கிலாத வண்ணமே. (சசு)

( இ - ள். )

இன்றித்தியாதி

| | |
|---|---|
| இன்றுசாதல் | கர்ப்பவாசத்திலேமுடிதல் |
| நின்றுசாதல் | சதாயுஸ்ஸம்பூர்ணனாய்முடிதல் |
| அன்றி | இவையிரண்டத்திலொன்றாதல் |
| யாரும் | எத்தனையேனும் அதிசயிதக்ஞானத்தையுடையபிரம்ஹாதிகளும் |
| வையகத்து | இந்தப்பூமியுபலக்ஷித்துச் சதுர்த்தசபுவனத்திலும் |
| ஒன்றிநின்று | ஒருபடிப்படநின்று |
| வாழ்தல் | ஜீவிக்குமது |
| இன்மைகண்டும் | இல்லாமையைஸாக்ஷாத்கரித்துவைத்தும் |
| நீசர் | அக்ஞராயிருக்குமவர்கள் பாபப்பிரசுரரொன்றுமாம் |
| அன்று | மகாபலிஅபகரித்தஅன்று |
| பார் | பூமியுபலக்ஷிதசகலலோகங்களையும் |
| அளந்த | அளந்துகொண்ட |
| பாதபோதை | திருவடியாகிறதாமரைப்பூவை |
| உன்னி | சிந்தித்து |
| சென்றுசென்று | அர்ச்சிராதிமார்க்கததிலேதத்தத்தேசத்திலேசென்று |
| வானின்மேல் | பரமபதத்திலே |
| தேவராய் | நித்தியசூரிகளோத்தவராய் |
| இருக்கிலாதவண்ணம் | இராதேயொழிகிறஹேது |
| என்கொலோ | என்னோவென்றபடி (௬௬) |

சண்டமண்ட லத்தினூடு சென்றுவீடு பெற்றுமேற்
கண்டுவீடி லாதகாத லின்பநாளு மெய்துவீர்
புண்டரீக பாதபுண்ணிய கீர்த்திநுஞ் செவிமடுத்
துண்டுநும் முறுவினைத் துயருணீங்கி யுய்ம்மினோ. (௬எ)

( இ - ள். )

சண்டமண்டலித்தியாதி

| | |
|---|---|
| சண்டமண்டலத்தின் | முமுக்ஷுக்களல்லாதாருக்கு துஷ்பிராபமானசூரியமண்டலத்தினுடைய |
| ஊடுசென்று | நடுவேபோய் |

| | |
|---|---|
| வீடுபெற்று | பரமபதத்தைலபித்து |
| மேல் | உத்தரகாலத்திலேவரக்கடவதாய் |
| வீடில்லாத | விச்சேதமின்றிக்கேயிருக்கிற |
| காதலின்பம் | அனுபவத்தாலேயுண்டாயிருக்கிறகைங்கரியசுகத்தை |
| கண்டு | சாக்ஷாத்கரித்து |
| நாளுமெய்துவீர் | யாவதாத்மபாவிலபிக்கவேண்டியிருப்பீர் |
| புண்டரீகபாதம் | தாமரைப்பூப்போலேயிருக்கிற திருவடிகளினுடைய |
| புண்ணியகீர்த்தி | புண்ணியகீர்த்தியிலே பாவநத்வபிரதையிலேயென்றபடி |
| நும் | உங்களுடைய |
| செவி | காதுகளை |
| மடுத்து | பிரவணமாக்கி |
| உண்டு | அனுபவித்து |
| உறு | உற்றிருக்கிற நீங்கள்சூழ்த்துக்கொண்டிருக்கிறவென்றபடி |
| வினைத்துயருள் | பாபபலமானதுக்கத்துள்ளேவர்த்திக்கிற |
| நும் | உங்களை |
| நீங்கி | அதினின்றுநீக்கி அந்தத்துக்கத்திலேநின்று நீக்கியென்றபடி அதவா |
| நும் | உங்களாலே வர்த்திக்கிற |
| உறு | சூழ்த்துக்கொள்ளப்பட்டிருக்கிற |
| வினைத்துயருள் | நீங்கள்பாபபலமானதுக்கத்தினுள்ளேநீங்க |
| நீங்கி | அதினின்று-நீங்கியென்று-நீங்கள்என்கிற இத்தனையும் அத்தியாஹரித்துக்கொண்டுயோஜிக்கவுமாம் |
| உய்மினோ | முன்சொன்னகைங்கரியசுகத்தை லபித்துஜ்ஜீவியுங்கோள். (கூஎ) |

முத்திறத்து வாணிபத் திரண்டிலொன்று நீசர்கண்
மத்தராய் மயங்குகின்ற திட்டதில் லிறந்துபோந்
தெத்திறத்து முய்வதோ ருபாயமில்லை யுய்குறிற்
றொத்தறுத்த தண்டுழாய்நன் மாலைவாழ்த்தி வாழ்மினோ. ()

( இ - ள். )

முத்திறத்தித்தியாதி

| | |
|---|---|
| முத்திறத்து | சத்வரஜஸ்தமோரூபகுணபேதத்தாலே மூன்றுவகைப்பட்ட |
| திறம் | பிரகாரம் |
| வாணிபத்து | பலத்திலேவைத்துக்கொண்டு |
| இரண்டில் | ஸத்வாநுகுணபலத்தையொழிந்த ரஜஸ்தமோரூபகுணத்வயாநுகுணபலத்வயத்திலே |
| ஒன்று | ருசியுடையரான |
| நீசர்கள் | ஹேயரானவர்கள் |
| இட்டதில் | அதிவிட்டு அந்தலோகத்திலே அந்தப்பலத்தைவைத்துஅதாவது கர்மபலத்தைவிட்டென்றபடி |
| இறந்து | அந்தபோகசரீரத்தைமுடித்து |
| போந்து | ஆகாசமேகாதிகிரமத்திலேஇந்தப்பூமியிலே கர்ப்பவாசத்திலேவந்துபிறந்து |
| மத்தராய் | தேகாத்பிமாநத்தாலே பிராகிருதபதார்த்தங்களிலேகளித்து |
| மயங்குகின்றது | ஆத்மபரமாத்ம க்ஞாநஹீநராய்மோஹிக்கிறார்களிறேஆகையால் |
| எத்திறத்தும் | எந்தப்பிரகாரத்தாலும் |
| உய்குறில் | உஜ்ஜீவனத்தையெண்ணில் |
| உய்வதோருபாயமில்லை | வேறோருஜ்ஜீவனோபாயமில்லை |
| தொத்து | கொத்தாக |
| அறுத்த | பறித்த |
| தண் | குளுந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாய்மாலையையுடைய |
| நல் | நல்லவிலக்ஷணனான |
| மாலை | சர்வாதிகனை |
| வாழ்த்தி | ஸ்துதித்து |
| வாழ்மின் | ஆநந்தநிர்ப்பரராகுங்கோள். (சுஅ) |

காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்
பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை
யாணமென் றடைந்துவாழு மாதர்காளெம் மாதிபாற்
பேணிநும் பிறப்பெனும் பிணக்கறுக்க கிற்றிரோ. (சுகூ)

(இ - ள்.)

காணிலுமித்தியாதி

| | |
|---|---|
| காணிலும் | கண்டாலும் |
| உரு | சரீரத்திலே |
| பொலார் | பொல்லாங்கையுடையவராய் |
| செவிக்கு | காதுக்கு |
| இனாத | அமதுரமான கடுவானவென்றபடி |
| கீர்த்தியார் | பிரசித்தியையுடையவராய் |
| பேணிலும் | ஆசிரயித்தாலும் |
| வரம் | பிரார்த்திதார்த்தத்தை |
| தர | தருகைக்கு |
| மிடுக்கிலாத | சக்தியில்லாத |
| தேவரை | ருத்திராதிதாமஸதேவதைகளை |
| ஆணமென்று | அரணென்று அபாசிரயமென்றென்றபடி |
| அடைந்து | ஆசிரயித்து |
| வாழும் | வாழ்வென்றுபிரமிக்கும் |
| ஆதர்காள் | அறிவுகேடர்காள் |

எம்மாதிபால்

| | |
|---|---|
| எம் | முமுக்ஷுக்களானவெங்களுக்கு |
| ஆதி | காரணபூதனானவெம்பெருமானுடைய |
| பால் | விஷயத்தில் |
| பேணி | ஆதரத்தைப்பண்ணி |
| நும் | உங்களுடைய |
| பிறப்பெனும் | ஜநநமென்றுசொல்லத்தக்கதான |
| பிணக்கு | தூற்றை |
| அறுக்க | சேதித்துக்கொள்ள |
| கிற்றிரோ | வல்லிகோள் வல்லீராகுங்கள். (௬௬) |

குந்தமோடு சூலம்வேல்க டோமரங்க டண்டுவாள்
பந்தமான தேவர்கள் பரந்துவான கம்முற
வந்தவாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநா
ளந்தவந்த வாகுலம் மமரரோ யறிவரோ. (௬எ)

(இ - ள்.)

| | |
|---|---|
| குந்தமோடு | சவளமென்கிற ஆயுதவிசேஷத்தோடேகூட |
| சூலம் | சூலமென்ன |

| | |
|---|---|
| வேல்கள் | பகுவிதமானவேலென்ன |
| தோமரங்கள் | பகுவிதமானதோமரமென்ன |
| தண்டு | கதையென்ன |
| வாள் | கத்தியென்ன இவைகளோடேகூட |
| பந்தமானதேவர்கள் | ருத்திரனோடேபந்துத்துவமானதேவர்கள் அன்றிக்கே இவ்வாயுதங்களைபலஆனிதசை யிலே பந்தகங்களாகவுடைய தேவதைக ளென்றுமாம் |
| பரந்து | நாலுதிக்குகளிலுஞ்சிதறி |
| வானகம் | ஆகாசகதங்களான தங்கள்தங்கள் கிரகங்க [ளை |
| உற | அடைகிறபோது |
| வந்த | தன்புஜபலத்தாலே யுத்தார்த்தஸந்நிஹித னன் |
| வாணன் | பாணாசுரனுடைய |
| ஈரைஞ்ஞூறு | துவிபஞ்சாசதியான ஆயிரமானவென்றபடி |
| தோள்களை | புஜங்களை |
| துணித்தநாள் | கழித்தஅன்று |
| அந்தவந்த | அந்தஅந்தவென்றபடி |
| ஆகுலம் | பாரவசியத்தை தத்தத்பாரவசியத்தையெ ன்றபடி |
| அமரரே | அப்போதருத்திரனோடுகூட வோடினதேவ தைகளே |
| அறிவர் | பிரத்யக்ஷமாகக்கண்டிருப்பர் ஏவகாரத்தா லே இவ்வர்த்தத்திலென் னுபதேசம்வேண் டாவென்னுமிடந்தோற்றுகிறது. (எ௰) |

வண்டுலாவு கோதைமாதர் காரணத்தி னால்வெகுண்
டிண்டவாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்
முண்டநீறன் மக்கள்வெப்பு மோடியங்கி யோடிடக்
கண்டுநாணி வாணனுக் கிரங்கினானெம் மாயனே. (எக)

(இ - ள்.)

வண்டித்தியாதி

| | |
|---|---|
| வண்டு | வண்டுகளானவை |
| உலாவு | மாருதேஸஞ்சரியாநிற்கிற |
| கோதை | மாலையையுடைத்தான |

| | |
|---|---|
| மாதர்காரணத்தினால் | தன்பெண்ணானவுஷையாகியஸ்திரீயினிமித் |
| வெகுண்டு | கோபித்து [தம் |
| இண்ட | நெருங்கவந்த |
| வாணன் | பாணாசுரனுடைய |
| ஈரைஞ்ஞூறுதோள்களை | ஆயிரந்தோள்களை |
| துணித்தநாள் | கழித்தஅன்று |
| முண்டநீறன் | முண்டிதசிரஸ்கனாய்பஸ்மச்சன்னனை ருத்தி ரனானவன் |
| மக்கள் | ஸ்கந்தாதிபுத்திரர்களென்ன |
| வெப்பு | ஜ்வரரோகமென்ன |
| மோடி | காளியாதல் மாரியாதலென்ன |
| அங்கி | நாற்பத்தொன்பதக் னிக்குநிர்வாஹகனான அக்கினியென்ன இவர்களோடேகூட |
| ஓடிட | ஓடிப்போம்போது |
| கண்டு | பார்த்து |
| நாணி | ஒருவனாசிருதரக்ஷணம்பண்ணும்படி யிது வென்றுலஜ்ஜித்து |
| வாணனுக்கு | பாணாசுரனுடையவிஷயத்திலே |
| இரங்கினான் | அவன்துர்க்கதியேபற்றுசாகக்கிருபைபண் ணினான் இரண்டுதோள்களையுங்கொடுத்து ரக்ஷித்தவன் |
| எம்மாயனே | நம்முடையகிருஷ்ணனே. (எக) |

போதின்மங்கை பூதலக் கிழத்திதேவி யன்றியும்
போதுதங்கு நான்முகன் மகன்னவன் மகன்சொலின்
மாதுதங்கு கூறனேற தூர்தியென்று வேதநூ
லோதுகின்ற துண்மையாவ தில்லைமற் றுரைக்கிலே. (எஉ)

( இ - ள். )

| | |
|---|---|
| போதிலித்தியாதி | |
| போது | பத்மமாகிறபுஷ்பத்தை |
| இல் | வாஸஸ்தானமாகவுடைய |
| மங்கை | நித்தியயுவதியானபெரியபிராட்டியும் அன் றிக்கே |
| போதில்மங்கை | புஷ்பத்திலேயிருக்கிற மங்கையென்றுமாம் |

பூதலக்கிழத்தி

| | |
|---|---|
| பூதலம் | பூமண்டலத்துக்கபிமாநியான |
| கிழத்தி | நாயகியானபூமிப்பிராட்டியும் |
| தேவி | மகிஷிகள் |
| அன்றியும் | அதுக்குமேலே |
| போது | திருநாபீகமலமாகிறபுஷ்பத்திலே |
| தங்கு | நித்தியவாசம்பண்ணுகிற்கிற |
| நான்முகன் | சதுர்முகனானபிரம்ஹாவானவன் |
| மகன் | புத்திரன் |
| சொலில் | ருத்ரன்ஸ்வரூபத்தையுள்ளபடிசொல்லப் பார்க்கில் |
| அவன்மகன் | அந்தநான்முகனுக்குப் புத்திரன் |
| மாது | பார்வதியானஸ்திரீயானவள் |
| தங்கு | நித்தியவாசம்பண்ணுகிற்கிற |
| கூறன் | வாமமானசரீரைகபாகத்தையுடையவன் |
| ஏறது | அந்தவிரஷபத்தை |
| ஊர்தி | வாகனமாகவுடையவன் |
| என்று | இந்தப்பிரகாரம் |
| வேதம் | நிர்த்தோஷசுருதியாகிற |
| நூல் | சாஸ்திரமானது |
| ஓதுகின்றதே | பிரதிபாதிக்கிறஅர்த்தமே ஏகாரத்தையிங் கேகூட்டுவது |
| உண்மை | சத்தியம் |
| மற்று | கீழ்ச்சொன்னஅர்த்தத்துக்குப்புறம்பாக |
| ஆவது | ஆகுமது |
| உரைக்கில் | ஆகமாதிகளைக்கொண்டு சொல்லப்பார்க்கில் அல்லதுசர்வாதிகத்துவநியதமான ஸ்ரீபூமி பதித்வ சதுர்முகபுத்ரத்வருத்ர பௌத்ரகத் வமாகிற கீழ்ச்சொன்னஅர்த்தமல்லாத அர் த்தம் |
| இல்லை | அசத்யம். (எ௨) |

மரம்பொதச் சரந்துரந்து வாலிவீழ முன்னொர்நா
ளுரம்பொதச் சரந்துரந்த வும்பராளி யெம்பிரான்
வரங்குறிப்பில் வைத்தவர்க் கலாதுவான மாளினு
நிரம்பநீடு போகமெத் திறத்தும்யார்க்கு மில்லையே. (எ௩)

(இ - ள்.)

| | |
|---|---|
| மரமித்தியாதி | |
| முன்னொர்நாள் | முன்புபோனசதுர்யுகங்களி லொருதிரேதா யுகத்திலே |
| மரம் | ஏழுமராமரங்களானவை |
| பொத | பொத்தும்படியாக மறுபாடுருவும்படியாக வென்றபடி |
| சரம் | பாணத்தை |
| துரந்து | ஏவி |
| வாலி | வாலியானவன் |
| வீழ | விழும்படியாக |
| உரம் | அவனுடையமார்வு |
| பொத | உருவும்படியாக |
| சரம் | பாணத்தை |
| துரந்த | ஏவின |
| உம்பர் | உபரிவர்த்திகளானநித்தியசூரிகளை |
| ஆளி | ஆளுமவனாய் |
| எம்பிரான் | நமக்குஸ்வாமியானசக்கிரவர்த்தி திருமகனுடைய |
| வரம் | சிரேஷ்டமான |
| குறிப்பில் | திருவுள்ளத்திலே |
| வைத்தவர்க்கலாது | வைக்கப்பட்டவர்க்கல்லது அவன்திருவுள்ளத்தாலே விஷயீகிருதர்க்கல்லதென்றபடி |
| வானமாளினும் | சத்தியலோகாதிகளாகிற வுபரிதநலோகங்களையாளும் பிரம்ஹாதிகளாயிருந்தாலும் |
| யார்க்கும் | எப்பேர்ப்பட்டவர்க்கும் |
| நிரம்ப | குறைவற |
| நீடு | தீர்க்கமான |
| போகம் | கைங்கரியஸுகமானது |
| எத்திறத்தும் | எவ்வழியாலும் |
| இல்லை | கிடையாது. (எங) |

அறிந்தறிந்து வாமனன் னடியிணை வணங்கினற்
செறிந்தெழுந்த ஞானமோடு செல்வமுஞ் சிறந்திடும்
மறிந்தெழுந்த தெண்டிரையுண் மன்னுமாலை வாழ்த்தினாற்
பறிந்தெழுந்த தீவினைகள் பற்றறுதல் பான்மையே. (எச)

( இ - ள். )

அறிந்தறிந்தித்தியாதி

| | |
|---|---|
| வாமனன் | சர்வசுலபமானவாமநனுயவதீர்ணனுனவெம்பெருமானுடைய |
| அடியிணை | ஸ்ரீபாதயுக்மத்தை |
| அறிந்தறிந்து | உபாயத்வேநோபேயத்வேந இரண்டுவிதமாகவறிந்து சாஸ்திரமுகத்தாலும் ஆசார்யோபதேசத்தாலுமறிந்தென்றுமாம் |
| வணங்கினுல் | நமஎன்றுஅத்திருவடிகளிலே நியஸ்தபரனுனுல் |
| செறிந்து | ஸ்பீதமாய் |
| எழுந்த | சாக்ஷாத்காரத்வபர்யந்தமாரூடமான |
| ஞானமோடு | ஸ்வரூபயாதாத்மியக்ஞானத்தோடேகூட |
| செல்வமும் | பரபக்தியாகிறஐச்வரியமும் |
| சிறந்திடும் | அபிவிர்த்தமாம் |
| மறிந்து | மடிப்புடனே |
| எழுந்த | கிளருகிற |
| தெண் | தெளிந்திருக்கிற |
| திரை | அலைகளையுடைத்தான் |
| உள் | க்ஷீராப்தியுள்ளே |
| மன்னு | நித்தியவாசம்பண்ணுகிற |
| மாலை | ஆசிருதர்பக்கல் வியாமுக்தனுனவெம்பெருமானை |
| வாழ்த்தினுல் | வாயாலேசொன்னுல் |
| எழுந்ததீவினைகள் | ஆத்மஸ்வரூபத்திலே அபிவிருத்தமாய்க்கிடக்கிற குரூரமானபாபங்கள் |
| பறிந்து | ஆத்மஸ்வரூபத்தினின்றும்விபக்தமாய் |
| பற்றறுதல் | வாஸனையாகிற ஸூக்ஷமாம்சத்தோடேபின்னமாகை |
| பான்மையே | ஸ்வபாவமே. (௭௪) |

ஒன்றிநின்று நற்றவஞ்செய் தூழியூழி தோறெலா
நின்றுநின்ற வன்குணங்க ளுள்ளியுள்ளந் தூயராய்ச்
சென்றுசென்று தேவதேவ ரும்பரும்ப ரும்பரா
யன்றியெங்கள் செங்கண்மாலை யாவர்காண வல்லரோ. (௭௫)

(இ - ள்.)

ஒன்றியித்தியாதி

| | |
|---|---|
| ஒன்றிநின்று | மநஸோடேபகவத்விஷயத்திலேசேர்ந்து நின்று |
| நல் | அநபிசம்ஹிதபலதயா நன்றான |
| தவம் | காயசோஷணோபலக்ஷிதகர்மயோகத்தை |
| செய்து | பண்ணி |
| ஊழியூழிதோறெலாம் | ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு என்கிறபடியே அநந்தகாலங்களிலெல்லாம் |
| நின்றுநின்று | க்ரமேண |
| அவன்குணங்கள் | பரமபாவநனான வெம்பெருமானுடையகுணங்களை |
| உள்ளி | அப்பியஸித்து |
| உள்ளந்தூயராய் | பரிசுத்தாந்தக்கரணராய் |
| சென்றுசென்று | துருவாஸ்ம்ருதி என்றும் நிதித்யாஸிதம் என்றும் ஸ்ம்ருத்யாந என்கிறகிரமத்திலே தர்சநஸமாநாகாரத்தளவும்போய் |
| உம்பரும்பரும்பராயன்றி | பரபக்திபரக்ஞான பரமபக்திகளாகிறமேலேமேலே போயல்லது |

தேவதேவரொங்கள்செங்கண்மாலை

| | |
|---|---|
| தேவதேவர் | நித்தியசூரிநிர்வாஹகனாய் |
| எங்கள் | சரணாகதரானவெங்களுடைய |
| செங்கண் | புண்டரீகாக்ஷனான |
| மாலை | வத்சலனை |
| யாவர்காணவல்லர் | ஆர்காணச்சமர்த்தர். (எரு) |

புன்புல வழியடைத் தரக்கிலச் சினைசெய்து
நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ
யென்பிலெள்கி நெஞ்சுருகி யுள்கனிந் தெழுந்ததோ
ரன்பிலன் றியாழியானை யாவர்காண வல்லரோ. (எசு)

( இ - ள். )

புன்புலவித்தியாதி

| | |
|---|---|
| புன் | புல்லியதான க்ஷுத்ரங்களானவென்றபடி |
| புலம் | சப்தாதிவிஷயங்களைப்பற்றிக்கிடக்கிற |
| வழி | இந்திரியங்களாகிறமார்க்கத்தை |

| | |
|---|---|
| அடைத்து | அவ்விஷயங்களிலேபோகாதபடிநிரோதித் |
| அரக்கிலச்சினைசெய்து | [து |
| அரக்கு | அரங்காநின்றுள்ள கண்ணுக்குத்தெரியாம ற்போகிறவென்றபடி |
| இலச்சினை | லாஞ்சநத்தையுடைத்தானதாகவாசனையை யுடைத்தானதாக வென்றபடி |
| செய்து | பண்ணி வாசனையும் அநுவர்த்தியாதபடிப ண்ணியென்றபடி |
| நன் | நன்றான |
| புலம் | எம்பெருமானாகிறவிஷயத்தில் |
| வழி | இந்திரியமார்க்கத்தை |
| திறந்து | பிரகாசிப்பித்து பிரவர்த்திப்பித்தென்றபடி |
| ஞானநல் | நன்றானஞானமாகிற |
| சுடர் | பிரபையை |
| கொளீ | கொளுத்தி மிகவுமுண்டாக்கியென்றபடி ஈசுவரனுடையஸ்வரூபங்களை நன்றாகவறிந் தென்றபடி |
| என்பில் | அஸ்திமயமானசரீரத்திலே |
| எள்கி | இரங்கி சிதில்மாயென்றபடி |
| நெஞ்சு | இருதயமானது |
| உருகி | திரவிபூதமாய் |
| உள் | உள்ளே |
| கனிந்து | பக்வராய் |
| எழுந்தது | பரமபக்திரூபமாக ஆவிர்ப்பூதமான |
| ஓர் | அத்விதீயமான |
| அன்பிலன்றி | பிரேமத்தாலல்லது |
| ஆழியானை | எங்கள்செங்கண்மாலென்று கீழச்சொன்ன படியே எங்களுக்கு விரோதிநிரஸநஹேது வானதிருவாழியைக்கையிலேதரித்தவனை |
| யாவர்காணவல்லர் | யார்காணகைக்குச்சமர்த்தர். (எசு) |

எட்டுமெட்டு மெட்டுமாயொ ரேழுமேழு மேழுமா
யெட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனை
யெட்டினாய பேதமோ டிறைஞ்சிநின்ற வன்பெய
ரெட்டெழுத்து மோதுவார்கள் வல்லர்வான மாளவே. (எஎ)

( இ - ள். )

| | |
|---|---|
| எட்டுமெட்டுமெட்டுமாய் | மூவெட்டிருபத்துநாலாயச் சதுர்விம்சதிதத்வசரீரனாய் என்றபடி |
| ஒரோழுமேழுமேழுமாய் | |
| ஓர் | முக்கியமான |
| ஏழும் | சப்தத்வீபங்களுமாய் |
| ஏழும் | சப்தகுலாசலங்களுமாய் |
| ஏழும் | சப்தஸமுத்திரங்களுமாய் இவற்றுக்குச்சரீரியாயென்றபடி |
| எட்டுமூன்றுமொன்றுமாகி | இத்தைக்கூட்டிப்பன்னிரண்டாக்கி துவாதசாதித்தியர்களுக்கும்அந்தராத்மாவாயென்றபடி |
| நின்ற | இப்படியிருக்கிற |
| ஆதி | காரணபூதனான |
| தேவனை | ஆசிரயணீயனானவெம்பெருமானை |
| எட்டினாயபேதமோடு* | அஷ்டாங்கப்பிரணாமமாகிற பிரணாமவிசேஷத்தோடே |
| இறைஞ்சிநின்று | ஆசிரயித்துநின்று |
| அவன் | அந்தரியாமியாய் காரணபூதனாய் ஆசிரயணீயனானவெம்பெருமானுடைய |
| பெயர் | நாமங்களிலேவைத்துக்கொண்டு |
| எட்டெழுத்தும் | கீழ்ச்சொன்ன அந்தரியாமித்துவங்களுக்குவாசகமானதிருவஷ்டாக்ஷரத்தை |
| ஓதுவார்கள் | வாயாலேஉச்சரிக்குமவர்கள் |
| வானம் | பரமபதமாகிறஆகாசத்தை |
| ஆள் | ஆளுகைக்கு |
| வல்லரோ | சமர்த்தரோ |

* எட்டினாயபேதமென்கிறவிடத்தில் மனோபுத்தியபிமாநேந ஸஹ்ருச்யதராதலே கூர்மவச்சதுரஃபாதான் ஷிரஸ்தத்ரசபஞ்சமம் என்கிறத்தைக்கண்டுகொள்வது. (எஎ)

சோர்விலாத காதலாற் றொடக்கறு மனத்தராய்
நீரரா வணைக்கிடந்த நின்மலன் னலங்கழ
லார்வமோ டிறைஞ்சிநின் றவன்பெய ரெட்டெழுத்தும்
வாரமாக வோதுவார்கள் வல்லர்வான மாளவே (எஅ)

(இ-ள்.)

சோர்விலாதவித்தியாதி

| | |
|---|---|
| நீர் | க்ஷீராப்தியாகிறஜலத்திலே |
| அராவு | திருவநந்தாழ்வானாகிற |
| அணை | படுக்கையில் |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| நின்மலன் | ஹேயப்பிரத்தியநீகனான வெம்பெருமானுடைய |
| நலங்கழல் | சுகரூபமான திருவடிகளை |
| ஆர்வமோடு | பிரேமத்தோடேகூட |
| இறைஞ்சிநின்று | ஆசிரயித்திருந்து |
| சோர்வு | அந்நியவிஷயசத்வமாகிறஆநி |
| இலாத | இல்லாத |
| காதலால் | பிரேமவிசேஷத்தாலே |
| தொடக்கு | ஸ்முருதிஸந்ததிரூபமானஸம்பந்தமானது |
| அறு | விச்சேதியாமலிருக்கிற |
| மனத்தராய் | நெஞ்சையுடையவராய் |
| அவன்பெயர் | அந்தக்ஷீராப்திநாதன் திருநாமமான |
| எட்டெழுத்தும் | திருவஷ்டாக்ஷரத்தை |
| வாரமாக | ஆசிரயமாக |
| ஓதுவார்கள் | தத்தேகநிஷ்டராய்க்கொண்டுசொல்லுமவர்கள் |
| வானமாள | பரமபதத்தையாளுகைக்கு |
| வல்லரோ | சமர்த்தர்களே. (எஅ) |

பத்திஞேடு பத்துமாயொ ரேழிஞேடொ ரொன்பதாய்ப்
பத்துநாற் றிசைக்கணின்ற நாடுபெற்ற நன்மையாய்ப்
பத்திஞய தோற்றமோடொ ரரற்றன்மிக்க வாதிபாற்
பத்தரா மவர்க்கலாது முத்திமுற்ற லாகுமே. (எகூ)

(இ-ள்.)

பத்திஞேடித்தியாதி

| | |
|---|---|
| பத்திஞேடு | தசதிக்குக்களோடேகூட |
| பத்துமாய் | அந்தத்திக்குக்களுக்கு அத்தியக்ஷரானஇந்திராதிகள் பதின்மருக்கும் அந்தரியாமியாய்இந்திராதிஈசானந்தம் எட்டுப்பேரும்சத்தியலோகாதிபனான பிரம்ஹாவும் அதோலோகாதிபதியான அநந்தனும் என்றுபதின்மரும் |

| | |
|---|---|
| ஓரொழிந்தொடு | முக்கியமானசப்தஸ்வரங்களோடேகூட |
| ஒரொன்பதாய் | அத்விதீயமான சிருங்காராதி நவநாட்டியரஸங்களுக்குநிர்வாஹகனாய் |
| பத்துநால் | பத்துநாலுமென்றபடி |
| திசை | பிரகாரம் ஏஷாதிக் என்கிறபடியே திக்சப்தம் பிரகாரவாசி |
| கண் | இடம் |
| பத்துநாற்றிசைக்கணின்ற | பதினாலுவகைப்பட்ட |
| நாடு | லோகங்களாலே |
| பெற்ற | லபிக்கப்பட்ட |
| நன்மையாய் | பிரயோஜநமாகைக்காக சர்வரஸ என்கிற தானே சேதநர்க்குபோக்யமாகைக்காகவென்றபடி |
| பத்தினாய | தசவிதமான |
| தோற்றமோடு | பிராதுர்ப்பாவத்தோடுவந்து |
| ஓர் | அத்விதீயமான |
| ஆற்றல் | க்ஷமையாலே |
| மிக்க | பூர்ணனான் |
| ஆதிபால் | ஆசிரயணீயனாகைக்காக முற்பாடனாயிருக்கிறவெம்பெருமான்விஷயத்தில் |
| பத்தராமவர்க்கலாது | சக்தராயிருக்குமவர்களுக்கல்லது |
| முத்திமுற்றல் | மோக்ஷபலம்பக்வமாகைக்கு |
| ஆகுமே | விரகுண்டோ. (எசு) |

வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுக
னாசமாக நாளுலப்ப நன்மைசேர்ப னங்கனிக்கு
வீசிமேனி மிர்ந்ததோளி லில்லையாக்கி னாய்கழற்
காசையா மவர்க்கலா லமரராக லாகுமே. (அ௰)

( இ - ள். )

வாசியித்தியாதி

| | |
|---|---|
| வாசியாகி | வாஜிரூபேணவந்தென்றபடி |
| நேசமின்றிவந்து | சிநேகமில்லாதவனாய்வந்து |
| எதிர்ந்த | எதிரிட்ட |

| | |
|---|---|
| தேனுகன் | தேனுகாஸுரனை |
| நாசமாக | நாசமாக்குகைக்காக |
| நாளுலப்ப | ஆயுஸைமுடிக்கைக்காக |
| நன்மைசேர் | அழகோடேகூடின |
| பணங்கனிக்கு | தாலபலத்துக்கு |
| வீசி | எறிந்து |
| மேல் | சத்துருவினளவுக்குமேலே |
| நிமிர்ந்த | அபிவிர்த்தமான |
| தோளில் | தோளாலே |
| இல்லையாக்கினாய்கழற்கு | அந்ததேனுகனைஅசத்கல்பனாக்கின உன்னுடையதிருவடிகளிலே |
| ஆசையாமவர்க்கலால | பிரேமத்தையுடையராமவர்க்கல்லது |
| அமரராகல் | நித்தியசூரிகளோடே அத்தியந்தசதருசராகை |
| ஆகுமே | ஆகுமோ. (அய) |

கடைந்தபாற் கடற்கிடந்து காலநேமி யைக்கடிந்
துடைந்தவா லிதந்தனக்கு தவவந்திராமனாய்
மிடைந்தவேழ் மரங்களு மடங்கவெய்து வேங்கட
மடைந்தமாலே பாதமே யடைந்துநாளு முய்மினோ. (அக)

(இ - ள்.)

கடைந்தவித்தியாதி

| | |
|---|---|
| கடைந்த | ஆசிருதார்த்தம்மதிக்கப்பட்ட |
| பாற்கடல் | க்ஷீராப்தியிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளி |
| காலநேமியை | காலநேமியென்கிறஅசுரனை |
| கடிந்து | வென்று |
| உடைந்தவாலி | தேவதாந்தரஸ்பரிசத்தாலே ஸ்வரூபமழிந்திருக்கிற வாலியினுடைய |
| தந்தனக்கு | தம்பிதனக்கு மஹாராஜருக்கென்றபடி அன்றிக்கே |
| உடைந்த | வாலிபயத்தாலே சிதிலனான |
| வாலிதந்தனக்கு | மஹாராஜர்க்கென்னவுமாம் தம்பியென்கிறதிலே மவ்வுக்கு ந ஆதேசமாய்த்தம்பியென்கிறதிற் கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது |

| | |
|---|---|
| உதவ | உபகரிக்கைக்கு |
| இராமனாய்வந்து | சக்ரவர்த்தித்திருமகனாயவதரித்து |
| பிளந்த | கிழித்தான் |
| ஏழ்மரங்களும் | சப்தசாலங்களும் சப்தகிரிகளும் உம்மை அநுக்தசமுச்சயபரம் |
| மடங்க | மடங்கும்படியாக |
| எய்து | பாணத்தாலேதொளைத்து |
| வேங்கடம் | திருமலையை |
| அடைந்த | பிராப்தனான் |
| மாலை | ஆசிருதவியாமுக்தனானவெம்பெருமானை |
| பாதமே | திருவடிகளிலே |
| அடைந்து | ஆசிரயித்து |
| நாளும் | நித்தியமாக |
| உய்மினோ | உஜ்ஜீவியுங்கோள் நாளுமென்கிற விதுமத்தியமணி நியாயத்தாலே நாளுமடைந்துநாளுமுய்மினோவென்றந்வயமாகக்கடவது. () |

எத்திறத்து மொத்துநின் றுயர்ந்துயர்ந்த பெற்றியோய்
முத்திறத்து மூரிநீர ராவணைத் துயின்றநின்
பத்துறுத்த சிந்தையோடு நின்றபாசம் விட்டவர்க்
கெத்திறத்து மின்பமிங்கு மங்குமெங்கு மாகுமே. (அஉ)

( இ - ள். )

எத்திறத்துமித்தியாதி

| | |
|---|---|
| எத்திறத்தும் | எவ்வகைப்பட்ட பிரகாரத்திலும் தேவமனுஷியதிரியக்ஸ்தாவரங்களாகிற நாலுபிரகாரத்திலுமென்றபடி |
| ஒத்துநின்று | தத்தத்ஜாதியாரோடே ஸஜாதியனாயவதரித்திருந்து |
| உயர்ந்துயர்ந்த | அஜஹத்ஸ்வபாவனாகையால்வந்த வுத்கர்ஷமென்ன சௌசீல்யாதிகளால்வந்த வுத்கர்ஷமென்ன இவற்றையுடைய |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே |
| முத்திறத்து | ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலமென்று மூவகைப்பட்ட |

| | |
|---|---|
| மூரிநீர் | நீராகிறமூரியிலே க்ஷீராப்தியாகிறவிடத்தி லேயென்றபடி |
| அரா | அநந்தபோகியாகிற |
| அணை | படுக்கையிலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளின |
| நின் | தேவர்விஷயமான |
| பத்து | பரபக்தியாலே |
| உறுத்த | அழுத்தின்மிகுத்தவென்றபடி |
| சிந்தையோடு | மநஸோடேகூட |
| நின்று | இருந்து |
| பாசம்விட்டவர்க்கு | இதரவிஷயஜங்கத்தைத் தியஜித்தவர்களுக் [கு |
| எத்திறத்துமின்பமே | சர்வவிதசுகமே |
| இங்கும் | சரீரத்தோடேயிருக்குமிருப்பிலும் |
| அங்கும் | பரமபதத்திலிருக்குமிருப்பிலும் |
| எங்கும் | உத்கிரமணதசை அர்ச்சிராதிமார்க்கமென் கிறவற்றிலும் |
| ஆகும் | உண்டாம் |

ஏ என்கிறத்தை இன்பமேயென்று கூட்டிற்று. (அஉ)

மட்டுலாவு தண்டுழா யலங்கலாய் பொலன்கழல்
விட்டுவிள் விலாதபோகம் விண்ணினண்ணி யேறினு
மெட்டினோ டிரண்டெனுங் கயிற்றினான் மனந்தனைக்
கட்டிவீடி லாதுவைத்த காதலின்பமாகுமே. (அங)

(இ - ள்.)

மட்டித்தியாதி

| | |
|---|---|
| மட்டு | தேனானது |
| உலாவு | வர்த்திச்சுக்கொண்டிருக்கிற |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாய்மயமான |
| அலங்கலாய் | மாலையையுடையவனே |
| பொலன் | ஸ்வர்ணம்போலேதர்சநீயமானவென்றபடி |
| கழல் | தேவர்திருவடிகளை |
| விட்டு | தியஜித்து |
| விள்வு | வேறுபோக்கு |
| இலாத | இல்லாத |

| | |
|---|---|
| போகம் | போகத்தை |
| விண்ணில் | பரமபதத்தை |
| நண்ணியேறினும் | ஏறிநண்ணினும் பரமபதத்தையேறி போகத்தைக்கிட்டிலுமென்றபடி |
| எட்டினோடிரண்டெனும் | எட்டுமிரண்டும்பத்தாய் பத்தியென்னப்படுமென்றபடி |
| கயிற்றினால் | பத்தியாகிற கயிற்றினாலேயென்றபடி கயிறாகையாவது பந்தமாயிருக்கை |
| மனந்தனை | பிரதானேந்திரியமானமநஸை |
| கட்டி | விஷயாந்தரத்திலேபோகாதபடிபந்தித்து |
| வீடிலாது | விடுகையில்லாமல் விச்சேதமில்லாமல் |
| வைத்த | வைக்கப்பட்ட |
| காதலே | பிரேமமே |
| இன்பமாகும் | சுகசாதனமாத்திரமன்றிக்கே சுகமாகும் ஏ என்கிறத்தைக்காதலேயென்று கூட்டிற்று பத்துஎன்கிறசப்தம் தசசங்கியையும் பத்தியையுஞ்சொல்லும்பத்தியென்கிறது கடைக்குறைத்தலாய் பத்துஎன்றாகையாலே எட்டினோடிரண்டென்கிறசப்தம் ஸ்வபர்யாயபத்துசப்தவாச்சியத்வரூபசம்பந்தத்தாலே பத்தியைலக்ஷிக்கிறது இப்படிச்சொல்லியதும் பத்தியினிடத்தில்கௌரவாதிசயத்தாலே.() |

பின்பிறக்க வைத்தனன்கொ லன்றிநின்று தன்கழற்
கன்புறைக்க வைத்தநா ளறிந்தனன்கொ லாழியான்
றன்றிறத்தொ ரன்பிலா வறிவிலாத நாயினே
னென்றிறத்தி லென்கொலெம் பிரான்குறிப்பில் வைத்ததே. ()

( இ - ள். )

பின்பிறக்கவித்தியாதி

| | |
|---|---|
| எம்பிரான் | என்னுதன் |
| பின் | இந்தச்சரீராவஸாநத்துக்குப்பின்பு |
| பிறக்க | இன்னமும்சிலசரீரப்பரிக்கிரகம்பண்ண |
| குறிப்பில் | இருதயத்திலே |
| வைத்தனன்கொல் | வைத்தானோ சங்கல்பித்தானோவென்றபடி |

| | |
|---|---|
| அன்றி | அதன்றிக்கே |
| தன்கழற்கு | தன்னுடையதிருவடிகளிலே |
| நின்று | ஸ்திரமாக |
| அன்பு | பிரேமமானது |
| உறைக்க | பரமபக்திரூபேண பரிணாமமாகிற உறைப்பையுடையதாம்படியாக |
| வைத்து | ஸங்கல்பித்து |
| அநாள் | அங்கொருதேசவிசேஷத்திலேபோயநுபவிக்குநாளை |
| அறிந்தனன்கொல் | நினைத்திருக்கிறானோ |
| ஆழியான் | பரத்வஸூசகமான திருவாழியாழ்வானைத்தரித்திருக்கிற |
| தன் | தன்னுடைய |
| திறத்து | இடையாட்டத்து |
| ஓரன்பிலா | ஸ்வரூபரூபகுணாதிவிஷயகமான வொருபிரேமமுமில்லாத |
| அறிவிலாத | பிரேமமின்றிக்கேயிருக்கிறதென்கிற ஞானமுமில்லாத |
| நாயினேன் | நாய்போலச்சுத்தியீனனான |
| என்திறத்தில் | என்னிடையாட்டத்து |
| எம்பிரான்குறிப்பில் வைத்தது | என்னாதன் திருவுள்ளத்திலே கொண்டிருக்கிறது |
| என்கொல் | என்னோ |

எம்பிரான்குறிப்பிலென்கிறபதங்களுக்கு ஆவிர்த்தியாலே அவிவிதாந்வயம். (அச)

நச்சரா வணைக்கிடந்த நாதபாத போதினில்
வைத்தசிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீயினு
மெய்த்தன்வல்லை யாதலா லறிந்தனன் னின்மாயமே
யுய்த்துநின் மயக்கினின் மயக்கலென்னை மாயனே. (அரு)

(இ - ள்.)

| | |
|---|---|
| நச்சு | உகவாதாருக்குவிஷத்தையுமிழாநின்ற |
| அராவணை | திருவநந்தாழ்வானாகிறபடுக்கையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |

| | |
|---|---|
| நாத | சர்வேசுவரனே |
| பாதம் | திருவடிகளாகிற |
| போதினில் | புஷ்பத்திலே |
| வைத்த | நியஸ்தமான |
| சிந்தை | என்மநஸை |
| வாங்குவித்து | அதினின்றுமீளும்படிபண்ணி |
| நீங்குவிக்க | அகலும்படிபண்ண |
| நீ | சுவதந்திரனானநீ |
| இனும் | இன்னமும் |
| மெய்த்தன்வல்லை | மெய்யேசமர்த்தன் |
| ஆதலால் | ஆகையால் ஒருவஸ்துவை வஸ்துவந்தரமாக்கவல்லசக்தியையுடையவனாகையாலே |
| அறிந்தனன் | உன்னைஸ்வதந்திரனென்றறிந்து கொண்டேன் |
| மாயனே | ஆச்சரியசேஷ்டிதத்தையுடையவனே |
| என்னை | உன்பக்கலிலே நியஸ்தபரனானவென்னை |
| நின்மாயமேயுய்த்து | துவததீனையானமாயையோடேசேரும்படி பண்ணி |
| நின்மயக்கினில் | உனக்குப்பரிகரமாயும் சேதநர்க்குப்புத்திப் பிரம்சஹேதுவுமான சப்தாதிவிஷயங்களிலேமூட்டி |
| மயக்கல் | புத்திகெடப்பண்ணாதேகொள்ளு. (அ௫) |

சாடுசாடு பாதனே சலங்கலந்த பொய்கைவாய்
ஆடராவின் வன்பிடர் நடம்பயின்ற நாதனே
கோடுநீடு கையசெய்ய பாதநாளு முன்னினால்
வீடனாக மெய்செய்யாத வண்ணமென்கொல் கண்ணனே. ()

(இ - ள்.)

| | |
|---|---|
| சாடு | சகடாசுரனை |
| சாடு | சாடாநின்றுள்ள நிரவயாநிற்கிறவென்றபடி |
| பாதனே | திருவடியையுடையவனே |
| சலங்கலந்த | விஷபிரசுரமாகையாலே ஜலத்தோடேமிசிரமான |
| பொய்கைவாய் | யமுநாஸரஸினுடையஇடத்திலே |
| ஆடராவின் | குரோதத்தாலே ஆடாநின்றுள்ளகாளியனாகிறசர்ப்பத்தினுடைய |

| | |
|---|---|
| வன்பிடர் | வலியதானபிடரியிலே |
| நடம்பயின்ற | நர்த்தனத்தையுண்டாக்கின |
| நாதனே | வகுத்தஸ்வாமியானவனே |
| கோடு | ஸ்ரீபாஞ்சசன்னியமாகிறசங்கத்தினுலே |
| நீடு | நித்யம்யுக்தமான |
| கைய | திருக்கையையுடையவனே |
| செய்யபாதம் | சிவந்திருக்கிற வுன்னுடையதிருவடிகளை |
| நாளும் | ஸர்வகாலமும் |
| உன்னினுல் | அநுஸ்ந்தித்தால் |
| வீடனுக | நான்மோக்ஷஸ்தனுக |
| மெய்செயாதவண்ணம் | மெய்யாகச்செய்யாதபிரகாரம் |
| என்கொல் | என்னே |
| கண்ணனே | கிருஷ்ணனே |

மெய்செய்கையாவது ஞானலாபத்தாலேயாவர் நிகரகல்வானத் தேயென்னும் ஆசுவாசநமாத்திரமன்றிக்கே தேகசம்பந்தத்தை யறுக்கையும் நித்தியசூரிகள் போகத்தைத்தருகையும். (அகூ)

நெற்றிபெற்ற கண்ணன்விண்ணி னுதனேடு போதின்மே
னற்றவத்த நாதனேடு மற்றுமுள்ள வானவர்
கற்றபெற்றி யால்வணங்கு பாதநாத வேதநின்
பற்றலாலொர் பற்றுமற்ற துற்றிலே னுரைக்கிலே. (அஎ)

(இ - ள்.)

நெற்றியித்தியாதி

| | |
|---|---|
| நெற்றி | லலாடத்திலே |
| பெற்ற | லபிக்கப்பட்டிருக்கிற |
| கண்ணன் | கண்ணையுடையருத்திரனுலேயும்அன்றிக்கே |
| நெற்றி | நெற்றியிலே |
| கண் | கண்ணை |
| பெற்றனன் | பெற்றிருக்கிறருத்திரனுலேயும் |
| விண்ணின் | ஸ்வர்க்கத்துக்கு |
| நாதனேடு | நாதனுயிருக்கிற இந்திரனேடும் |
| போதின்மேல் | திருநாபிக்கமலமாகிய புஷ்பத்தின்மேலிருப்பானுய் |
| நல் | நன்றான |

| | |
|---|---|
| தவத்த | தபஸையுடையவனும் தவத்து என்று பாடமானபோது தபஸாலேயென்றபடி |
| நாதனோடு | சதுர்த்த சபுவனநிர்வாஹகனான பிரம்ஹாவோடுங்கூடியிருக்கிற |
| மற்றுமுள்ளவானவர் | ஹவிர்ப்பாகபுக்குக்களான ஸகலதேவதைகளாலும் |
| கற்றபெற்றியால் | அவரவர்கற்றபிரகாரங்களாலே |
| வணங்கு | ஆசிரயிக்கப்பட்டிருக்கிற |
| பாத | திருவடிகளையுடையவனே |
| நாத | நாதனாக |
| வேத | வேதபிரதிபாத்தியனானவனே |
| உரைக்கில் | சொல்லில் |
| நின்பற்றலால் | உன்னுடைய திருவடிகளாகிற அபாசிரயத்தையொழிய மற்றோர்பற்றதென்று கூட்டுவது |
| மற்றோர்பற்று | வேறோரந்தவபாசிரயத்தை |
| உற்றிலேன் | தீண்டிலேன். (௮௭) |

வெள்ளைவேலை வெற்புநாட்டி வெள்ளெயிற்ற ராவளாஅ
யள்ளலாக் கடைந்தவன்ற ருவரைக்கோ ராமையா
யுள்ளநோய்க ளுர்மருந்து வானவர்க் களித்தவெம்
வள்ளலாரை யன்றிமற்றோர் தெய்வநான் மதிப்பனே. (௮௮)

(இ - ள்.)

வெள்ளையித்தியாதி

| | |
|---|---|
| வெள்ளை | வெண்மையையுடைத்தான |
| வேலை | சமுத்திரத்திலே க்ஷீராப்தியிலேயென்றபடி |
| வெற்பு | மந்தரமாகிறபர்வதத்தை |
| நாட்டி | நட்டு |
| வெள் | வெளுத்திருக்கிற |
| எயிற்று | தந்தங்களையுடைத்தான |
| அரா | வாசுகியாகிறபாம்பை |
| அளாய் | அளாவி சுற்றியென்றபடி |
| அள்ளலா | பிபிடமாகும்படி அள்ளேகாதும்செறிவும் கூர்மையுமென்னக்கடவதிறே |

| | |
|---|---|
| கடைந்தஅன்று | மதித்தவன்று |
| அரு | துத்தரமான |
| வரைக்கு | மந்தரபர்வதத்துக்கு |
| ஓராமையாய் | தாரகமான அத்விதியகூர்மமாய் அன்றிக் கேதாரணார்த்தமாக கூர்மஜாதியிலே அந்யதமனுயென்றுமாம் |
| உள்ளநோய்கள் | துர்வாசசாபத்தாலேயுண்டான அஸ்ரீப்பிரவேசம் சத்வக்ஞானபலஹாநி அசுரபரிபவமிவற்ருல்வந்ததுக்கங்களாகிறநோய்களை |
| தீர் | நிவர்த்திப்பிக்கிற |
| மருந்து | லக்ஷ்மீகடாக்ஷமும் அமுர்தமுமாகிறமருந்தை |
| வானவர்க்கு | தேவதைகளுக்கு |
| அளித்த | கொடுத்த |
| எம்வள்ளலாரையன்றி | எனக்குப்பிரகாசிப்பித்த அவ்வௌதாரியத்தையுடையவரையல்லது |
| மற்றொர்தெய்வம் | வேறொருதேவதையை |
| நான் | அநந்யப்பிரயோஜனனுய் அநந்யசரணனுயுள்ளநான் |
| மதிப்பனே | ஆசிரயணீயமாகநினைப்பேனோ. (அஅ) |

பார்மிகுத்த பாரமுன் னொழிச்சுவான ருச்சுனன்
றேர்மிகுத்து மாயமாக்கி நின்றுகொன்று வென்றிசேர்
மாரதர்க்கு வான்கொடுத்து வையமைவர் பாலதாஞ்
சீர்மிகுத்த நின்னலாலொர் தெய்வநான் மதிப்பனே. (அகூ)

(இ - ள்.)

| | |
|---|---|
| பார் | பூமிக்கு |
| மிகுத்த | அதிகமாகத் தோற்றியிருந்த |
| பாரம் | பாரத்தை |
| முன் | முற்பாடனுய்க்கொண்டு |
| ஒழிச்சுவான் | ஒழிச்சுகைக்காக |
| அருச்சுநன் | அர்ச்சுநனுடைய |
| தேர் | தேரை |
| மிகுத்து | மிகவுநடத்தியென்னுதல் உத்கிருஷ்டபரிகரமாக்த் தேர்ற்றுவித்தென்னுதல் |

| | |
|---|---|
| மாயம் | பகலையிரவாக்குகைமுதலான ஆச்சரியங்க |
| ஆக்கி | உண்டாக்கி [ளை |
| நின்று | முகந்தோற்றுமேநின்று |
| கொன்று | எதிரிகளைக்கொன்று |
| வென்றிசேர் | தங்களைஜயபாகிகளாக அபிமானித்துக்கொ ண்டிருக்கிற |
| மாரதர்க்கு | துர்யோதனாதிமகாரதர்க்கு |
| வான்கொடுத்து | வீரசுவர்க்கத்தைக்கொடுத்து |
| வையம் | பூமியானது |
| ஐவர் | பஞ்சபாண்டவர்களுடைய |
| பால்தாம் | பக்கத்ததாம்படி |
| சீர் | புகழை |
| மிகுத்த | அதிகமாகப்பண்ணின |
| நின்னலால் | உன்னையொழிந்த |
| ஓர்தெய்வம் | ஒருதெய்வத்தை |
| நான் | ஆசிருதபக்ஷபாதிநீயென்றறிந்தநான |
| மதிப்பனே | ஆசிரயணீயமாகநினைப்பேனோ. (௮௧) |

குலங்களாய வீரிரண்டி லொன்றிலும் பிறந்திலே
னலங்களாய நற்கலைக ளாலிலுநவின்றிலேன்
புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனிதநின்
னிலங்குபாத மின்றிமற்றோர் பற்றிலேனெம் மீசனே. (௮௨)

( இ - ள். )

குலங்களாய்வித்தியாதி இப்பாட்டிலே பொறியிலேனென்கிற பதந்தொடங்கிக் காரணபரம்பரையைச் சொல்லுகிறதென்றும் குலங்களாயவென்று தொடங்கிப் பாடக்கிரமத்திலே கார்யபரம்பரையைச் சொல்லுகிறதென்று மிரண்டுநிர்வாஹகம் அதில்முந்தினது

| | |
|---|---|
| பொறியிலேன் | சப்தாதிவிஷயங்களிலே அகப்பட்டுநின்றேன் பொறியென்றுயந்திரமாய் மத்சியாதிநிரகணயந்திரசதுர்சமான சப்தாதிவிஷயங்களைக்காட்டுகிறது இல்லென்றிடமாயகப்பட்டேனென்கிறது பொறியென்றுதொடங்கிஇயந்திரமுடனே யிலாஞ்சனையெனவுமெனக்கடவதிறே அதுக்கடியான |

| | |
|---|---|
| புலன்களைந்தும் | பஞ்சேந்திரியங்களையும் |
| வென்றிலேன் | ஜயித்திலேன் அதுக்கடியான |
| நலங்களாய் | சேதநருடைய குணாநுகுணமாகநல்வழிநடத்துகிற |
| நன் | நன்றான |
| கலைகள்நாலிலும் | நாலுவேதங்களிலும் |
| நவின்றிலேன் | சீலிக்கப்பெற்றிலேன் நவிலுகை பயிலுகை அதுக்கடியாக |
| ஈரிரண்டாய | நாலுவகைப்பட்டிருக்கிற |
| குலங்கள் | வருணங்களிலேவைத்துக்கொண்டு |
| ஒன்றிலும் | ஒருவர்ணத்திலும் |
| பிறந்திலேன் | பிறக்கப்பெற்றிலேன் இதுமுந்தினநிர்வாஹகம் இனிஅநந்தரநிர்வாஹகம் அக்ஷரார்த்தமதுவேயாயிருக்கச்செய்தே ஒன்றிலும் பிறந்திலேன் பிறவாமையாலே நாலிலுநவின்றிலேன் நவிலாமையாலே புலன்கள் வென்றிலேன் வெல்லாமையாலே பொறியிலகப்பட்டேனென்றுகண்டுகொள்வது |
| புனித | விஷயப்பிராவண்ணியத்தாலே அசுத்தராயிருக்குமவரையும் சுத்தராக்கவல்லசக்தியையுடையவனே |
| நின் | உன்னுடைய |
| இலங்கு | பிரகாசிக்கிற |
| பாதமன்றி | திருவடிகளையொழிய |
| மற்றோர்பற்று | வேறோருஜ்ஜீவநோபாயம் |
| இலேன் | உடையவனல்லேன் |
| எம் | அகிஞ்சநராயும் அகதிகளாயுமிருக்கிறவெங்களுக்கு |
| ஈசனே | நிர்வாஹகனானவனே எம்மீசனே குலங்களாயவென்று தொடங்கியன்வயம். (௯௰) |

பண்ணுலாவு மென்மொழிப் படைத்தடங்க ணாள்பொருட்
டெண்ணிலா வரக்கரை நெருப்பினா னெருக்கினாய்
கண்ணலாலொர் கண்ணிலேன் கலந்தசுற்றமற்றிலே
னெண்ணிலாத மாயநின்னை யென்னுணீக்க லென்றுமே. (௯௧)

( இ - ள். )

பண்ணித்தியாதி

| | |
|---|---|
| பண் | குறிஞ்சி காமரம் காந்தாரமித்தியாதி பண்ணோடே |
| உலாவு | சேர்ந்தும் |
| மென் | மிருதுவாயுமிருக்கிற |
| மொழி | பேச்சையுடையளாய் |
| படை | வாளாகிறவாயுதம்போன்றதாய் |
| தடம் | இடமுடைத்தான |
| கணுள்பொருட்டு | கண்களையுடைத்தானஜநகராஜன்திருமகள் பொருட்டு |
| எண்ணிலா | அசங்கியாதரான் |
| அரக்கரை | ராக்ஷஸரை |
| நெருப்பினல் | சராக்கினியாலே |
| நெருக்கினுய் | நெருக்கினநீ |
| கண் | எனக்குநிர்வாஹகன் |
| அலால் | உன்னையன்றியிலே |
| ஓர்கண்ணிலேன் | வேறுநிர்வாஹகரையுடையேனல்லேன் |
| கலந்த | நெஞ்சுபொருந்தின |
| மற்றுச்சுற்றமிலேன் | வேறுபந்துவர்க்கத்தையுடையேனல்லேன் |
| எண்ணிலாத | அசங்கியேயமான |
| மாய | ஆச்சரியசக்தியுடையவனே |
| நின்னை | சர்வசக்தியானவுன்னை |
| என்னுள் | அகிஞ்சநனனவென்பக்கல்நின்றும் என்று நீக்கலென்றுகூட்டி |
| என்றும் | நான்கலங்கினவன்றும் |
| நீக்கல் | அகற்றுதொழியவேணும். (கக) |

விடைக்குலங்க ளேழடர்த்து வென்றிவேற்கண் மாதரார்
கடிக்கலந்த தோள்புணர்ந்த காலியாய வேலைநீர்
படைத்தடைத்த திற்கிடந்து முன்கடைந்த நின்றனக்
கடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்ன வேண்டுமே. ()

( இ - ள். )

விடைக்குலங்களித்தியாதி

| | |
|---|---|
| முன் | ஆதிகாலத்திலே |

| | |
|---|---|
| வேலை | எல்லையான திரைக்கிளர்த்தியையுடைத்தா [ன |
| நீர் | ஏகார்ணவஜலத்தை |
| படைத்து | சிருஷ்டித்து |
| அதிற்கிடந்து | தேதகதேசமான க்ஷீராப்தியிலேகண்வளர்ந்தருளி |
| கடைந்து | தேவர்களுக்காக அந்தக்ஷீராப்திமதனம்பண்ணின பின்பு |
| அடைத்து | அந்தத்தேவர்களுக்கு விரோதியானராவணநிரஸநார்த்தமாகச் சேதுபந்தத்தாலே அந்தக்ஷீராப்திஸஜாதீயமானகடலையடைத்து |
| விடை | எருதுகளுடைய |
| குலங்கள் | நாலுவர்ணங்களான |
| ஏழடர்த்து | ஏழையுநெரித்து |
| வென்றி | ஜயசீலமான |
| வேல் | வேல்போலேயிருக்கிற |
| கண் | திருக்கண்களையுடைத்தான |
| மாதரார் | யவ்வநாரம்பத்தையுடைத்தான நப்பின்னைப்பிராட்டியினுடைய |
| கடி | செவ்வியோடும் பரிமளத்தோடும் |
| கலந்த | சேர்ந்த |
| தோள் | தோளை |
| புணர்ந்த | சம்சிலேஷித்த |
| காலியாய | பசுக்களுக்குநிர்வாஹகனான இடையனானவனே |
| நின்றனக்கு | உனக்கு |
| அடைக்கலம்புகுந்த | ரக்ஷணீயத்வேனபரமென்றுபற்றின |
| என்னை | அநந்யசரணனானவென்னை |
| அஞ்சலென்னவேண்டுமே | பயப்படாதேகொள்ளென் றொருவார்த்தையருளிச்செய்யவேணும். (௯௨) |

சுரும்பரங்கு தண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமே
விரும்பிநின் றிறைஞ்சுவேற் கிரங்கரங்க வாணனே
கரும்பிருந்த கட்டியே கடற்கிடந்த கண்ணனே
இரும்பரங்க வெஞ்சரந் துரந்தவில்லி ராமனே. (௯௩)

(இ - ள்.)

| | |
|---|---|
| சுரும்பித்தியாதி | |
| கரும்பு | சர்வதோமதுரமாய் |
| இருந்த | ஸ்வாபாவிகமானரஸ்யதையையுடைத்தான |
| கட்டியே | சர்க்கரைபோலேபோக்கியனானவனே கட்டிகன்னல் |
| கடல் | க்ஷீராப்தியிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| கண்ணனே | சுலபனானவனே |
| இரும்பு | இரும்புபோலேதிருடமான எதிரிகள் சரீரத்திலே |
| அரங்க | அழுந்தும்படி |
| வெஞ்சரம் | அக்கினிபோன்றபாணங்களை |
| துரந்த | நடத்தின |
| வில் | தனுஸையுடைத்தான |
| இராமனே | தசரதாத்மஜனானவனே |
| அரங்கவாணனே | கோயிலுக்குநிர்வாஹகனானவனே |
| சுரும்பு | வண்டுகள் |
| அரங்கு | படிந்திருக்கிற |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாயானது |
| துதைந்து | ஸ்பரிசித்து |
| அலர்ந்த | விகசித்துவருகிற |
| பாதமே | உன்னுடையதிருவடிகளையே |
| விரும்பி | ஸ்வயம்பிரயோஜநமாகருசித்து |
| நின்று | ஆத்மாநந்தமாகநின்று |
| இறைஞ்சுவேற்கு | அநுபவிக்கையிலேயிழிந்தவெனக்கு |
| இரங்கு | கிருபைபண்ணியருளவேணும். (௯௫) |

ஊனின்மேய வாவிநீ யுறக்கமோ டுணர்ச்சிநீ
ஆனின்மேய வைந்துநீய வற்றுணின்ற தூய்மைநீ
வானிேனாடு மண்ணுநீ வளங்கடற் பயனுநீ
யானுநீய தன்றியெம்பி ரானுநீயி ராமனே. (௯௬)

( இ - ள். )

| | |
|---|---|
| ஊனித்தியாதி | |
| உறக்கமோடு | நித்திரையுடனே |
| உணர்ச்சி | பிரபோதமானதும் |
| நீ | உன்னதீநம் |
| வளம் | அழகியதான |
| கடல் | சமுத்திரத்தினுடைய |
| பயனும் | பிரயோஜநபூதமான அமிர்தமும் ரத்நாதிகளும் |
| நீ | உன்னதீநம் |
| ஆனின்மேய | பசுக்களிலுண்டான |
| ஐந்தும் | பஞ்சகவ்யங்களும் |
| நீ | உன்னதீநம் |
| அவற்றுள் | அந்தபபஞ்சகவ்யங்களிலே |
| நின்ற | வர்த்திக்கிற |
| தூய்மை | சுத்தியும் |
| நீ | உன்னதீநம் |
| ஊனின்மேய | சரீரத்திலே வர்த்திக்கிற |
| ஆவி | பஞ்சவிர்த்திபிராணனும் |
| நீ | உன்னதீநம் அதவா |
| வானினோடு | பரமாகாசத்தோடு |
| மண்ணும் | சம்சாரமும் |
| நீ | உன்னதீநமென்றுமாம் |
| யானும் | பெத்தனானநானும் |
| நீ | உனக்குப்பிரகாரபூதன் |
| அதன்றி | அதொழிய |
| இராமனே | சக்கிரவர்த்தித்திருமகனே |
| எம்பிரானுநீ | அகிஞ்சநரானவெங்களுக்கு நிர்வாஹகனுநீ. |

அடக்கரும் புலன்களைந் தடக்கியாசை யாமவை
தொடக்கறுத்து வந்துநின் றொழிற்கணின்ற வென்னைநீ
விடக்கருதி மெய்செயாது மிக்கோராசை யாக்கினுங்
கடற்கிடந்த நின்னலாலொர் கண்ணிலேனெம் மண்ணலே. ()

( இ - ள். )

| | |
|---|---|
| அடக்கருமித்தியாதி | |
| அடக்கரும் | நியமிக்கவரிதான |

| | |
|---|---|
| புலன்களைந்து | பஞ்சேந்திரியங்களை |
| அடக்கி | நீயேயுன்விஷயமாக்கி |
| ஆசையாமவை | விஷயாந்தரங்களிலாசையென்று பேர்பெற்றவையே |
| தொடக்கு | வாசனையாகிறசம்பந்தத்தோடேகூட |
| அறுத்து | தவிர்த்து |
| வந்து | |
| நின் | உன்னுடைய |
| தொழிற்கண் | கைங்கரியமாகிறதொழிலிடத்து |
| நின்றவென்னைநீ | இந்திரியமேதொடங்கி யிவ்வளவும்புகுநிறுத்தினநீ |
| விடக்கருதி | விடநினைத்து |
| மெய்செயாது | அந்நியதாஸங்கல்ப்பியாந்யதாசாரத்தைப் பண்ணி |
| மிக்கோராசையாக்கினும் | விஷயாந்தரங்களிலே ருசியைப்பிறப்பித்தாயாகிலும் |
| எம்மண்ணலே | எனக்குநிருபாதிகஸ்வாமியானவனே |
| கடல் | திருப்பாற்கடலிலே |
| கிடந்த | என்னுடையஹிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளின |
| நின்னலால் | உன்னையொழிய |
| ஓர்கண்ணிலேன் | வேறொருநிர்வாஹகரையுடையேனல்லேன். |

வரம்பிலாத மாயைமாய வையமேழு மெய்ம்மையே
வரம்பிலூழி யேத்திலும் வரம்பிலாத கீர்த்தியாய்
வரம்பிலாத பல்பிறப் பறுத்துவந்து நின்கழல்
பொருந்துமா திருந்தநீ வரஞ்செய்புண்ட ரீகனே. (௬௫)

( இ - ள். )

| | |
|---|---|
| வரம்பித்தியாதி | |
| வரம்பு | சங்கியாபரிச்சேதம் |
| இலாத | இன்றிக்கேயிருக்கிற |
| மாயை | மூலப்பிரகிருதியைஸ்வாதீனமாகவுடைய |
| மாய | ஆச்சரியமானஞானசக்தியாதி குணங்களையுடையவனே |

| | |
|---|---|
| வையமேழும் | சப்தலோகஜநங்களும் |
| மெய்மையே | மெய்யாகவே |
| வரம்பிலூழி | அசங்கியாதமானகல்பங்கள் |
| ஏத்திலும் | ஸ்தோத்திரம்பண்ணினாலும் |
| வரம்பிலாத | எல்லைகாணவொண்ணாத |
| கீர்த்தியாய் | ரக்ஷகத்வபிரதையையுடையவனே |
| வரம்பிலாத | ஓரொன்றேஸங்கியாபரிச்சேதசூந்யமான |
| பல் | தேவாதிபேதேநபலவிதமான |
| பிறப்பு | ஜந்மங்களை |
| அறுத்து | ஒழித்து |
| வந்து | அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்திலேவந்து |
| நின்கழல் | சூரிபோக்கியமானவுன்திருவடிகளிலே |
| பொருந்துமா | பிரதக்ஸ்தித்யநர்ஹமாகப் போரும்படியாக |
| இருந்த | சிக்ஷிதமாம்படியாக |
| நீ | உன்னுடையவுஜ்ஜீவநார்த்தமாக அவசரப்பிரதிக்ஷனான நீ |
| வரம் | பிரசாதத்தை |
| செய் | பண்ணியருளவேணும் |
| புண்டரீகனே | புண்டரீகாக்ஷனே. (கசு) |

வெய்யவாழி சங்குதண்டு வில்லும்வாளு மேந்துசீர்க
கையசெய்ய போதின்மாது சேருமார்ப நாதனே
ஐயிலாய வாக்கைநோ யறுத்துவந்து நின்னடைந்
துய்வதோரு பாயநீ யெனக்குநல்க வேண்டுமே. (கஎ)

(இ - ள்.)

| | |
|---|---|
| வெய்யவித்தியாதி | |
| சீர் | வாத்ஸல்யகுணத்தாலே |
| வெய்ய | பிரதிபக்ஷத்துக்குதுஸஹமான |
| ஆழி | திருவாழியென்ன |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யமென்ன |
| தண்டு | ஸ்ரீகௌமோதகியென்ன |
| வில்லும் | ஸ்ரீசார்ங்கமென்ன |
| வாளும் | ஸ்ரீநந்தகமென்ன இவற்றை |

| | |
|---|---|
| ஏந்து | தரித்துக்கொண்டிருக்கிற |
| கைய | திருக்கைகளையுடையவனே அன்றிக்கே |
| வெய்யவாழியித்யாதி | ஸ்ரீபஞ்சாயுதங்களைத்தரித்துக்கொண்டிருக்குமவையாம் |
| சீர் | வெறும்புறத்திலே அழகியவாயுமிருக்கிற |
| கைய | திருக்கைகளையுடையவனேயென்றுமாம் |
| செய்ய | சிவந்திருக்கிற |
| போதில் | பதும்மாகிறபுஷ்பத்திலேயிருக்கிற |
| மாது | ஸுகுமாரையானபெரியபிராட்டியார் |
| சேரும் | நித்தியவாசம்பண்ணுகிற |
| மார்வ | திருமார்பையுடையவனே |
| நாதனே | சர்வஸ்வாமியானவனே |
| ஐயில் | சிலேஷ்மத்திலே |
| ஆய | உண்டான |
| ஆக்கை | சரீரமாகிற |
| நோய் | வியாதியை |
| அறுத்து | ஒழித்து |
| வந்து | ஒருதேசவிசேஷத்திலேவந்து |
| நின்னடைந்து | பிராப்பியனானவுன்னைப்பிராபித்து |
| உய்வதோருபாயம் | அடிமைசெய்துஜ்ஜீவிப்பதொருவழியை |
| நீ | ஸ்ரீயப்பதியாய்சர்வ திவ்யாயுதோபேதனானநீ |
| எனக்கு | உன்கைபார்த்திருக்கிறவெனக்கு |
| நல்கவேண்டும் | தந்தருளவேணும். (௬௭) |

மறந்துறந்து வஞ்சமாற்றி யைம்புலன்க ளாசையும்
துறந்துநின்க ணாசையே தொடர்ந்துநின்ற நாயினேன்
பிறந்திறந்து பேரிடர்ச் சுழிக்கணின்று நீங்குமா
மறந்திடாது மற்றெனக்கு மாயநல்க வேண்டுமே. (௬௮)

( இ - ள். )

| | |
|---|---|
| மறமித்தியாதி | |
| மறம் | கோபத்தை |
| துறந்து | விட்டு |
| வஞ்சம் | கிருத்திரிமத்தை |

| | |
|---|---|
| மாற்றி | தவிர்த்து |
| ஐம்புலன்கள் | பஞ்சேந்திரியங்களுடைய |
| ஆசையும் | இதரவிஷயத்திலுண்டான சங்கத்தையும் |
| துறந்து | விட்டு |
| நின்கண் | உன்பக்கல் |
| ஆசையே | பிரேமத்தையே |
| தொடர்ந்து | உறவுபண்ணி ஆதரித்தென்றபடி |
| நின்றநாயினேன் | இப்படியிருந்துள்ள அநந்யகதியானஅடியேன் |
| பிறந்து | ஜந்மாதிஷ்டவிகாரத்தையுமடைந்து |
| இறந்து | மரணாதிகளையுமடைந்துபடுகிற |
| பேரிடர் | மகாதுக்கமாகிற |
| சுழிக்கணின்றும் | சுழியிடத்தினின்றும் |
| சுழி | சக்கிரம் |
| நீங்குமா | நீங்கும்பிரகாரத்தை |
| மறந்திடாது | சம்சாரத்திலே நான்பட்டதுக்கத்தைவிஸ்மரியாதே |
| மற்று | துக்கநிவிர்த்திக்குமேற்பட்டபுருஷார்த்தத்தையும் |
| எனக்கு | அசக்தனானவெனக்கு |
| மாய | ஆச்சரியயுக்தனே |
| நல்கவேண்டும் | தந்தருளவேணும். (கூஅ) |

காட்டிநான்செய் வல்வினைப் பயந்தனன் மனந்தனை
நாட்டிவைத்து நல்லவல்ல செய்யவெண்ணி னாலெனக்
கேட்டதன்றி யென்னதாவி பின்னைகேள்வ நின்னொடும்
பூட்டிவைத்த வென்னைநின்னு ணீக்கல்பூவை வண்ணனே. ()

( இ - ள். )

| | |
|---|---|
| காட்டியித்தியாதி | |
| பின்னைகேள்வ | நப்பின்னைப்பிராட்டிக்குவல்லபனானகிருஷ்ணனே |
| என்னதாவி | என்னுடையஆத்மாவை |
| நின்னொடும் | உன்பக்கலிலே |
| பூட்டிவைத்தவென்னை | சமர்ப்பித்தவென்னை |

| | |
|---|---|
| நான்செய் | என்னாலேசெய்யப்பட்ட |
| வல் | பிரபலமான |
| வினை | பாபங்களை |
| காட்டி | என்னெஞ்சிலேப்படுத்தி |
| பயந்தனுல் | அந்தப்பாபபலத்தால் |
| மனந்தனை | என்னுடையநெஞ்சை |
| நாட்டிவைத்து | இதனுபவிக்கப்ப்ராப்தமென்று துணிவிலே நிறுத்திவைத்து |
| நல்லவல்ல | நல்லதன்றிக்கேயிருக்கிற கொடியசெயல்களை |
| செய்யவெண்ணினுர் | யமபடர்செய்யக்கோலினுர் |
| எனக்கேட்டது | என்றுகேட்டுப்போந்தவற்றை |
| அன்றி | தவிர்த்து |
| பூவைவண்ணனே | பூவைப்பூப்போலேயிருக்கிறநிறத்தையுடையவனே |
| நின்னுணிக்கல் | உன்பக்கலினின்றுமகற்றுதொழியவேணும். |

பிறப்பினேடு பேரிடர்ச் சுழிக்கணின்று நீங்குமஃ
திறப்பவைத்த ஞானநீச ணாக்கணக்கொ டேற்றுமா
பெறற்கரிய நின்னபாத பத்தியான பாசனம்
பிறர்க்கரிய மாயனே யெனக்குநல்க வேண்டுமே. (௱)

( இ - ள். )

| | |
|---|---|
| பிறப்பித்தியாதி | |
| பிறப்பினேடு | ஜந்மத்தோடேகூடின |
| பேரிடர் | தாபத்திரையரூபமகாதுக்கத்தைவிளைக்கிற |
| சுழிக்கணின்றும் | சம்சாரசக்கிரத்தினின்றும் |
| நீங்கும் | நீங்குகைக்குறுப்பான |
| அஃது | சுருதிப்பிரசித்தமானதத்வஹிதங்களை |
| இறப்பவைத்த | இறக்கும்படியாகவைத்த மறக்கும்படியாக வைத்தவென்றபடி |
| ஞாநநீசரை | சர்வோத்தமராகத்தங்களை யபிமாநித்துக் கொண்டிருக்கிற வேதவநாதரராகிறநீசரை |
| கணைக்கொடு | கணையிலேகொண்டு |
| ஏற்றுமா | ஏற்றுகைக்குபாயமாகவேதாந்தங்களிலே சொல்லியிருக்கிற |

| | |
|---|---|
| பெறற்கரிய | பெறுதற்கரிதான |
| நின்னபாத | உன்திருவடிகள்விஷயமான |
| பத்தியான | பத்தியாகிற |
| பாசனம் | மரக்கலத்தை |
| பிறர்க்கரியமாயனே | உன்கிருபையொழியவேறொன்றாலேபெறுவார்க்கரியஆச்சரியபூதனே |
| எனக்கு | எல்லாவற்றுக்கு முன்கிருபையல்லதறியாதவெனக்கு |
| நல்கவேண்டும் | தந்தருளவேணும். (௱) |

இரந்துரைப்ப துண்டுவாழி யேமநீர் நிறத்தமா
வரந்தருந் திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்னுசீர்ப்
பரந்தசிந்தை யொன்றிநின்று நின்னபாத பங்கய
நிரந்தர நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே. (௱க)

( இ - ள். )

இரந்தித்தியாதி

| | |
|---|---|
| ஏமம் | வலியதாயிருக்கிற மஹத்தாயிருக்கிறவென்றபடி |
| நீர் | கடல்போன்ற |
| நிறத்து | நிறத்தையுடைய |
| அமா | நிருபாதிகபந்துவானவனே |
| இரந்து | யாசித்து |
| உரைப்பது | விண்ணப்பஞ்செய்யவேண்டுவது |
| உண்டு | |
| வாழி | மங்களாசாஸநம் |
| வரந்தரும் | இவ்வாத்மாவுக்கு நன்மைகளைக்கொடுப்பதேஸ்வபாவமான |
| திருக்குறிப்பில் | திருவுள்ளத்திலே |
| வைத்ததாகில் | எனக்குத்தரநினைத்ததாகில் |
| மன்னு | ஸ்திரமான |
| சீர் | நன்மையை திருக்குறிப்பில்வைத்ததாகிலென்றுபூர்வேணாந்வயம் |
| பரந்த | விஷயங்களிலேவிஸ்திருதமான |
| சிந்தை | என்மநஸ்ஸு [று |
| ஒன்றிநின்று | மற்றொன்றிற்போகாதே ஒருமைப்பட்டுநின் |

| | |
|---|---|
| நின்னபாதபங்கயம் | உன்னுடையபதுமம்போன்றதிருவடிகளை |
| நிரந்தரம் | விச்சேதமில்லாதபடி |
| நினைப்பதாக | நினைக்கும்படி |
| நீநினைக்கவேண்டும் | நீதிருவுள்ளமாகவேணும். (௱க) |

விள்விலாத காதலால் விளங்குபாத போதில்வைத்
துள்ளுவேன தூனநோ யொழிக்குமா தெழிக்குநீர்ப்
பள்ளிமாய பன்றியாய வென்றிவீர குன்றினாற்
றுள்ளுநீர் வரம்புசெய்த தோன்றலொன்று சொல்லிடே. (௱உ)

(இ - ள்.)

| | |
|---|---|
| விள்வித்தியாதி | |
| தெழிக்கும் | கோஷிக்கிற |
| நீர் | கடலை |
| பள்ளி | படுக்கையாகவுடைத்தாயிருக்கிற |
| மாய | ஆச்சரியமான சௌலப்பியாதிகுணயுக்தனே |
| பன்றியாய | வராஹஸஜாதியனாயவதரித்த |
| வென்றிவீர | ஹிரண்யாதிகளைஜயித்தவீரத்தையுடையவனே |
| குன்றினால் | மலைகளாலே ஜாத்யேகவசநம் |
| துள்ளுநீர் | துள்ளுகிறசமுத்திரத்திலே |
| வரம்புசெய்த | சேதுபந்தத்தைப்பண்ணின |
| தோன்றல் | சக்கிரவர்த்தித்திருமகனானவனே |
| விள்வு | பிரயோஜநாந்தரங்களைப்பற்றிநெகிழ்தல் |
| இலாத | இல்லாமலிருக்கிற |
| காதலால் | பிரேமத்தாலே |
| விளங்கு | உஜ்வலமான |
| பாதபோதில் | திருவடித்தாமரைகளிலே |
| வைத்து | நெஞ்சைவைத்து |
| உள்ளுவேனது | அத்திருவடிகளையேதஞ்சமென்றுநினைத்திருக்கிறவென்னுடையதான |
| ஊனநோய் | ஊனத்தை ஞானசங்கோசத்தை விளைக்கக்கடவதானசரீரசம்பந்தமாகிறவியாதியை |
| ஒழிக்குமா | ஒழிக்கும்பிரகாரம் |
| ஒன்றுசொல்லிடே | ஒருவார்த்தையருளிச்செய்யவேணும். () |

திருக்கலந்து சேருமார்ப தேவதேவ தேவனே
இருக்கலந்த வேதநீதி யாகிநின்ற நின்மலா
கருக்கலந்த காளமேக மேனியாய நின்பெய
ருருக்கலந் தொழிவிலா துரைக்குமா றுரைசெயே. (௱௩)

(இ - ள்.)

திருவித்தியாதி

| | |
|---|---|
| திரு | பெரியபிராட்டியார் |
| கலந்து | சம்சிலேஷித்து |
| சேரும் | நித்தியவாசம்பண்ணுகிற |
| மார்ப | திருமார்பையுடையவனே |
| தேவ | பிரம்ஹாதிகளுக்கும் |
| தேவ | நித்தியசூரிகளுக்கும் |
| தேவனே | நிர்வாஹகனானவனே |
| இருக்கலந்த | ருக்குக்கள்கலந்த |
| வேதம் | வேதத்தையுடைத்தாயிருக்கையே வேதபிரதிபாத்தியதையையென்றபடி |
| நீதியாகிநின்ற | ஒழுக்கமாகிநின்ற ஸ்வபாவமாக வுடையவென்றபடி |
| நின்மலா | ஹேயப்பிரத்தியநீகனானவனே |
| கரு | பொன்னோடே |
| கலந்த | சேர்ந்த |
| காளமேகம் | நீலதோயதம்போன்ற |
| மேனி | திருமேனியையுடைய |
| ஆய | இடையனானகிருஷ்ணனே அன்றிக்கேநீரைக்கர்ப்பத்திலேயுடைய காளமேகம்போன்ற திருமேனியையுடைய கிருஷ்ணனே |
| நின்பெயர் | உன்னுடையதிருநாமங்களை |
| உருக்கலந்து | உன்னுடையவடிவழகோடேகூட |
| ஒழிவிலாது | ஒழிவில்லாமல்ப்படிக்கு |
| உரைக்குமாறு | பேசும்பிரகாரத்தை |
| உரைசெயே | அருளிச்செய்யவேணும். (௱௩) |

கடுங்கவந்தன் வக்கிரன் கரன்முரன் சிரமவை
இடந்துகூறு செய்தபல் படைத்தடக்கை மாயனே
கிடந்திருந்து நின்றியங்கு போதுநின்ன பொற்கழற்
றொடர்ந்துமீள் விலாததோர் தொடர்ச்சிநல்க வேண்டுமே. ()

(இ - ள்.)

கடுங்கவந்தனித்தியாதி

| | |
|---|---|
| கடும் | குரூரனான |
| கவந்தன் | கபந்தனென்ன |
| வக்கிரன் | தந்தவக்கிரனென்ன |
| கரன் | கரனென்ன |
| முரன் | முரனென்னஇவர்களுடைய |
| சிரமவை | சிரஸுக்களை |
| இடந்து | பேதித்து |
| கூறுசெய்த | சரீரங்களைச்சின்னமாகப்பண்ணின |
| பல் | நானாவிதமான |
| படை | ஆயுதங்களையுடைத்தாயும் |
| தடம் | தடாகம்போலேகுளிர்ந்திருக்கிற |
| கை | திருக்கைகளையுடைய |
| மாயனே | ஆச்சரியசக்தியுக்தனே |
| கிடந்து | சயனித்தும் |
| இருந்து | உபவேசித்தும் |
| நின்று | ஸ்திதித்தும் |
| இயங்கு | சஞ்சரித்தும்போருகிற |
| போது | காலங்களில் |
| நின்ன | உன்னுடையதான |
| பொற்கழல் | பொன்போல்ஸ்பிரஹணீயமான திருவடிக |
| தொடர்ந்து | மேல்விழுந்து [ளை |
| மீள்விலாதது | இடைவிடாதபடியான |
| ஓர்தொடர்ச்சி | ஒருசெறிவை நைரந்தர்யத்தையென்றபடி |
| நல்கவேண்டும் | பண்ணித்தந்தருளவேண்டும். (ாச) |

மண்ணையுண் டுமிழ்ந்துபின் னிரந்துகொண் டளந்துமண்
கண்ணுளல்ல தில்லையென்று வென்றகால மாயினாய்
பண்ணைவென்ற வின்சொன்மங்கை கொங்கைதங்கு பங்கயக்
கண்ணநின்ன வண்ணமல்ல தில்லையெண்ணும் வண்ணமே. ()

( இ - ள். )

| | |
|---|---|
| மண்ணையிருந்தியார்தி | |
| மண்ணை | பூமியை |
| உண்டு | பிரளயாபத்திலேவயிற்றிலேவைத்து |
| உமிழ்ந்து | சிருஷ்டிகாலத்திலே வெளிநாடுகாணப்புறப்படவிட்டு |
| பின் | அதற்குப்பின்பு |
| இரந்து | மஹாபலிபக்கலிலே அர்த்தித்து |
| கொண்டு | பெற்று |
| அளந்து | |
| மண் | ஜகத்தானது |
| கண்ணுளல்லது | நம்கடாக்ஷத்திலல்லது |
| இல்லையென்று | ஸ்திதிக்கமாட்டாதென்று |
| வென்று | பிரளயம் மகாபலிப்பிரபுருதிகளைஜயித்து அன்றிக்கே |
| வென்று | ஸகலபதார்த்தங்களையும்பரிணாமஹேதுதயாஜயித்து |
| காலமாயினாய் | காலத்தைவிபூதியாகவுடையவனே |
| பண்ணை | காநத்தை |
| வென்றவின்சொல் | மதுராலாபத்தையுடைத்தான |
| மங்கை | பருவத்தையுடைத்தானபிராட்டியுடைய |
| கொங்கை | திருமுலைத்தடத்திலே |
| தங்கு | வர்த்திக்கிற |
| பங்கயக்கண்ண | புண்டரீகாக்ஷனே |
| எண்ணும்வண்ணம் | உன்வடிவழகை யநுபவிக்கவேணுமென்கிற மனோரதபிரகாரத்துக்குஹேது |
| நின்னவண்ணமல்லதில்லை | } உன்வடிவழகல்லதுவேறொன்றில்லை. (ராகு) |

கறுத்தெதிர்ந்த காலநேமி காலனோடு கூடவன்
றறுத்தவாழி சங்குதண்டு வில்லும்வாளு மேந்தினாய்
தொறுக்கலந்த வூனமஃதொழிக்கவன்று குன்றமுன்
பொறுத்தநின் புகழ்க்கலாலொர் நேசமில்லை நெஞ்சமே. ( )

( இ - ள். )

| | |
|---|---|
| சறுத்தித்திபாதி | |
| சறுத்து | கோபித்து |
| எதிர்ந்த | எதிரிட்ட |
| காலநேமி | காலநேமியானவன் |
| காலனோடுகூட | மிருத்தியுவோடேகூடும்படியாக |
| அன்று | அவனாலே பிரம்ஹாதிகளுக்காபத்துவந்தவன்று |
| அறுத்த | அவன்றலையையறுத்த |
| ஆழி | ஸ்ரீசுதர்சநமும் |
| சங்கு | பாஞ்சஜந்யமும் |
| தண்டு | கௌமோதகியும் |
| வில்லும் | சார்ங்கமும் |
| வாளும் | நந்தகமுமாகிறபஞ்சாயுதங்களை |
| ஏந்தினாய் | பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கிறவனே |
| தொறு | பசுக்களுக்கு |
| கலந்த | அவர்ஜநீயதயப்பிராப்தமான |
| ஊனமஃது | அந்தவூனத்தை ஆபத்தையென்றபடி |
| ஒழிக்க | போக்குகைக்காக |
| அன்று | பசுக்களுமிடையரும் ஆபந்நராகப்பிரசங்கித்தவன்று |
| குன்றம் | கோவர்த்தனமாகிறபர்வதத்தை |
| முன் | ஒருவருக்காகிலுநோவுவருவதற்குமுன்பு |
| பொறுத்த | தரித்துக்கொண்டுசகித்த |
| நின்புகழ்க்கலால் | உன்னுடையஆபத்சகத்துவமாகிறகுணத்துக்கல்லது |
| நெஞ்சம் | என்னுடையநெஞ்சுக்கு |
| ஓர்நேசமில்லை | வேறொருசிநேஹமில்லை. (௬௬) |

காய்சினத்த காசிமன்னன் வக்கிரன்ப வுண்டிரன்
மாசினத்த மாலிமான்சு மாலிகேசி தேநுகன்
நாசமுற்று வீழநாள்க வர்ந்தநின் கழற்கலா
னேசபாச மெத்திறத்தும் வைத்திடேனெம் மீசனே. (௬௭)

( இ - ள். )

காயித்தியாதி

| | |
|---|---|
| காய் | சாத்விகரைக்கொல்லாநிற்கிற |
| சினத்த | கோபத்தையுடைத்தான |
| காசிமன்னன் | காசிராஜன் |
| வக்கிரன் | தந்தவக்கிரன் |
| பவுண்டரன் | பௌண்டரகன் |
| மா | மகத்தான |
| சினத்த | கோபத்தையுடைத்தான |
| மாலி | மாலியென்ன |
| மான் | மஹானான |
| சுமாலி | சுமாலியென்ன |
| கேசி | கேசியென்ன |
| தேனுகன் | தேனுகனென்ன இவர்கள் |
| நாசம் | துக்கத்தை |
| உற்று | அடைந்து |
| வீழ | மிருதராய்விழும்படியாக அன்றிக்கே வீழ வென்றுவிடுதலாய் பிராணனைவிழும்படியென்றுமாம் |
| நாள் | அவர்களுடைய ஆயுசை |
| கவர்ந்த | வாங்கின |
| நின் | உன்னுடைய |
| கழற்கலால் | திருவடிகளுக்கொழிய |
| எத்திறத்தும் | எவ்விஷயத்திலும் |
| நேசம் | பக்தியாகிற |
| பாசம் | கயிற்றை |
| எமீசனே | எனக்குஸ்வாமியானவனே |
| வைத்திடேன் | வையேன். (௱எ) |

கேடில்சீர் வரத்தனைக் கெடும்வரத் தயனர
னாடினோடு நாட்டமா யிரத்தனாடு நண்ணிலும்
வீடதான போகமெய்தி வீற்றிருந்த போதிலுங்
கூடுமாசை யல்லதொன்று கொள்வனோ குறிப்பிலே (௱அ)

( இ - ள். )

கேடிலித்தியாதி கேடில்சீர்வரத்தனுயயன் கெடும்வரத்தரனென்றுகூட்டுவது.

| | |
|---|---|
| கேடில்சீர் | அழிவில்லாதசம்பத்தையுடையனும்படி |
| வரத்தனுயயன் | பகவத்பிரசாதத்தையுடையனுயிருக்கிறபிரம்ஹா |
| வரம் | பிரசாதம் தேவப்ரஸாதேவரணேஜாமாதரீ வரஃபுமாந் என்னக்கடவதிறே |
| கெடும்வரத்தரன் | தன்னுலேசர்வமுமுபஸoஹிருதமாம்படிபகவத்பிரசாதத்தைப்பெற்றருத்திரன் அதவா |
| கேடில்சீர் | அழிவில்லாதசம்பத்தையுடையனுய் |
| வரத்தனுய் | வரப்பிரதானக்ஷமனுமாயிருக்கிற |
| அயன் | பிரம்ஹா |
| கெடும் | ஸர்வஸoஹர்த்துவத்தையுடையனுய் வரப்பிரதானக்ஷம்னுமான |
| அரன் | ருத்ரன் அத்தென்கிறவிதுசாரியைச்சொல் |
| நாடினேடு | இவர்களுடையவைசுவரியமாகிறநாட்டோடேகூட |
| நாட்டமாயிரத்தன் | ஆயிரநாட்டத்தையுடைய இந்திரனுடைய |
| நாட்டம் | கண் |
| நாடு | ஐசுவரியமான்நாட்டை |
| நண்ணிலும் | பிராபித்தாலும் |
| வீடதான | அப்படிப்பட்டமோக்ஷரூபமான |
| போகம் | போகத்தை |
| எய்தி | அடைந்து |
| வீற்றிருந்தபோதிலும் | நிரதிசயாநந்தநிர்ப்பரயுக்தனுகையாகிற அதிசயத்தைப்பெற்றிருந்தபோதிலும் |
| குறிப்பில் | நெஞ்சாலே [கே |
| கூடுமாசையல்லது | உன்னேக்கூடவேணுமென்கிற ஆசையன்றிக் |
| ஒன்றுகொள்வனே | ஒன்றைவிரும்புவேனே. (ாஅ) |

சுருக்குவாரை யின்றியே சுருங்கினுய் சுருங்கியும்
பெருக்குவாரை யின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்
செருக்குவார்க டக்குணங்க டர்த்ததேவ தேவனென்
றிருக்குவாய் முனிக்கணங்க ளேத்தயானு மேத்தினேன். ()

( இ - ள். )

சுருக்கித்தியாதி

| | |
|---|---|
| சுருக்குவாரையின்றியே | ஒருகர்மம் ஒருகாலம் ஒருகர்த்தா இவர்களாகிறஹிராஸஹேதுக்களின்றிக்கே |
| சுருங்கினாய் | வாமநஞனாய் |
| சுருங்கியும் | அப்படிச்சுருங்க இருக்கச்செய்தேயும் |
| பெருக்குவாரையின்றியே | கர்மகாலகர்த்தாக்களாகிற விருத்திஹேதுக்களின்றிக்கே |
| பெருக்கமெய்து | வ்ர்த்தியடைந்தமையாகிற |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே |
| செருக்குவார்கள் | இந்திராதிகளைமகாபலிபிரபுருதிகளுடைய |
| தீக்குணங்கள் | அகங்காரமமகாரங்களாகிற நாசகரஸ்வபாவங்களை |
| தீர்த்த | போக்கின |
| தேவதேவண | சர்வேசுவரன் |
| என்று | இப்படி |
| இருக்குவாய் | ருக்பிரதேசங்களும் |
| முனிக்கணங்கள் | முநிசமூகங்களும் |
| ஏத்த | ஸ்தோத்திரம்பண்ண |
| யானும் | அநந்யப்பிரயோஜநனானநானும் |
| ஏத்தினேன் | ஸ்தோத்திரம்பண்ணினேன் ஸாசநாபுத்தியாஸ்தோத்திரம்பண்ணினேனல்லேனென்கை. (௱௧) |

தூயனாயு மின்றியுஞ் சுரும்புலாவு தண்டுழாய்
மாயநின்னை நாயினேன் வணங்கிவாழ்த்து மீதெலாம்
நீயுநின் குறிப்பினிற் பொறுத்துநல்கு வேலைநீர்ப்
பாயலோடு பத்தர்சித்த மேயவேலை வண்ணனே. (௱௨)

( இ - ள். )

தூயனாயுமித்தியாதி

| | |
|---|---|
| சுரும்பு | வண்டுகள் |
| உலாவு | சஞ்சரிக்கிற |
| தண் | குளுந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாயையுடைய |

| | |
|---|---|
| மாய | ஆச்சரியபூதனே |
| வேலைநீர் | சமுத்திரஜலமாகிற |
| பாயலோடு | படுக்கையோடேகூட |
| பத்தர் | பக்திமான்களுடைய |
| சித்தமேய | இருதயத்திலேவந்திருக்கிற |
| வேலைவண்ணனே | கடல்போன்றநிறத்தையுடையவனே |
| தூயனும் | ஸ்வரூபக்ஞானத்தினாலே சுத்தியைஅநுஸந்தித்தும் |
| அன்றியும் | அந்தஸ்வரூபத்துக்கு அகங்காரம்மகாரங்களால்வந்த அசுத்தியை அநுஸந்தியாமையாலும் |
| நாயினேன் | நாய்போலேஅத்தியந்தஹீநனானநான் |
| நின்னை | பரமபாவநனாய்பரமபோக்கியனானவுன்னை |
| வணங்கிவாழ்த்துமீதெலாம் | நமஸ்கரித்துமங்களாசாஸநம்பண்ணுகையாகிறவிதெல்லாம் |
| நீயும் | க்ஷமாநிதியானநீயும் |
| நின்குறிப்பினில் | உன்னுடையதிருவுள்ளத்திலே |
| பொறுத்து | க்ஷமித்து |
| நல்கு | பிரசாதத்தைப்பண்ணியருளவேணும். () |

வைதுநின்னை வல்லவா பழித்தவர்க்கு மாறில்போர்
செய்துநின்று செற்றதீயில் வெந்தவர்க்கும் வந்துனை
யெய்தலாகு மென்பராத லாலெம்மாய நாயினேன்
செய்தகுற்ற நற்றமாக வேகொண்ஞால நாதனே. (௱௰௧)

( இ - ள். )

வைதித்தியாதி

| | |
|---|---|
| நின்னை | ஸ்தவ்யனானவுன்னை |
| வல்லவா | உள்ளசக்திப்பிரகாரம் |
| வைது | பருஷித்து |
| பழித்தவர்கரும் | நிந்தித்தசிசுபாலாதிகளுக்கும் |
| மாறில் | நிஸ்துலமான |
| போர் | யுத்தத்தை |
| செய்து | பண்ணி |
| நின்ன | உன்னுடையதான |

| | |
|---|---|
| செற்றம் | கோபமாகிற |
| தீயில் | அக்கினியிலே |
| வெந்தவர்க்கும் | தக்தரானவர்லிபிரபுருதிகளுக்கும் |
| உனை | சர்வாதிகனுனவுன்னை |
| வந்தெய்தலாகுமென்பர் | வந்துபிராபிக்கலாகுமென்றுருஷிகள்சொல்லாநின்றார்கள் |
| ஆதலால் | ஆகையால் |
| எம்மாய | என்னுடையதயாக்ஷாந்தியாச்சரியகுணயுக்தனே |
| ஞாலநாதனே | ஜகத்துக்குச்சேஷியானவனே |
| நாயினேன் | அநந்யகதியாயிருக்கிறநான் |
| செய்தகுற்றம் | பண்ணினகுற்றத்தை |
| நற்றமாகவே | குணமாகவே |
| கொள் | கொள்ளவேணும். (௱௰௧) |

வாள்களாகி நாள்கள்செல்ல நோய்மைகுன்றி மூப்பெய்தி
மாளுநாள தாதலால் வணங்கிவாழ்த்தென் னெஞ்சமே
ஆளதாகு நன்மையென்று நன்குணர்ந்த தன்றியு
மீள்விலாத போகநல்க வேண்டுமால பாதமே. (௱௰௨)

( இ - ள். )

| | |
|---|---|
| வாள்களித்தியாதி | |
| என்னெஞ்சமே | எனக்குப்பவ்வியமானமனஸே |
| வாள்களாகி | ஆயுஸையீரும்வாள்கள்போல |
| நாள்கள் | திவசங்கள் |
| செல்ல | கழிய |
| நோய்மை | ரோகத்தினாலே |
| குன்றி | பலஹானியாக |
| மூப்பு | ஜரையை |
| எய்தி | பிராபித்து |
| மாளுநாளது | மாளுமந்தநிவஸம்வந்து பிராப்தமென்றத்தியாஹார்யம் அன்றிக்கே |
| மாளுநாள் | முடியுநாள் |
| அது | அப்படிப்பட்டது அரியதமென்றபடி |
| ஆதலால் | ஆகையாலே |

| | |
|---|---|
| வணங்கிவாழ்த்து | சர்வேசுவரன்திருவடிகளிலேவணங்கிஸ் தோத்திரம்பண்ணப்பார் காலக்ஷேபார்த்தமாகத்தோத்திரம்பண்ணப்பாரொன்றுமாம். |
| அதன்றியும் | காலக்ஷேபார்த்தமேயன்றிக்கே |
| ஆளதாகும் | அந்தஅடிமைசெய்கை |
| நன்மையென்று | புருஷார்த்தமென்று |
| நன்குணர்ந்து | நன்றாகப்புத்திபண்ணி வணங்கிவாழ்த்தென்றநுஷங்கம் |
| மீள்விலாத | புநராவிருத்தியில்லாத |
| போகம் | கைங்கரியபோகத்தை |
| மாலபாதம் | சர்வாதிகனானசர்வேசுவரனுடையதிருவடிகளே |
| நல்கவேண்டும் | நமக்குத்தரவேண்டும் நீவணங்கிவாழ்த்தென்றிங்குமநுஷங்கம். (௱௰௨) |

சலங்கலந்த செஞ்சடைக் கறுத்தகண்டன் வெண்டலைப்
புலன்கலங்க வுண்டபாத கத்தன்வன் றுயர்கெட
அலங்கன்மார்பில் வாசநீர் கொடுத்தவ னடுத்தசீர்
நலங்கொண்மாலைநண்ணும்வண்ண மெண்ணுவாழிநெஞ்சமே

(இ - ள்.)

சலங்கலந்தவித்தியாதி

| | |
|---|---|
| நெஞ்சமே | வாராய்மநஸ்ஸே |
| சலம் | கங்காஜலத்தோடே |
| கலந்த | மிசிரமான |
| செஞ்சடை | சிவந்தஜடையையுடைத்தான |
| கறுத்தகண்டன் | நீலகண்டத்தையுடைத்தானவனாய் [லே |
| வெண்டலை | பிரம்ஹசிரஸினுடைய வெளுத்தகபாலத்தி |
| புலன்கலங்க | சர்வேந்திரியங்களும் க்ஷுபிதமாம்படியாக |
| உண்ட | ஜீவித்த |
| பாதகத்தன் | பிரமஹத்யையாகிறபாதகத்தையுடைத்தானருத்ரனுடைய |
| வன் | பிரபல்மான |
| துயர் | துக்கமானது |
| கெட | நசிக்கும்படியாக |

| | |
|---|---|
| அலங்கன்மார்பில் | திருமாலையையுடைத்தான திருமார்பிலே யிருக்கிற |
| வாசநீர் | பரிமளிதமானஜலத்தை |
| கொடுத்தவன் | கொடுத்துரக்ஷிக்கிறவனுய் |
| அடுத்தசீர் | ஸ்வரூபாநுபந்தித்வததாலே நித்தியசம்பந்தமானகல்யாணகுணங்களாலேயுண்டான |
| நலங்கொள் | வைலக்ஷண்யத்தையுடைத்தான |
| மாலை | சர்வேசுவரனை |
| நண்ணும்வண்ணம் | கிட்டும்பிரகாரமான அவனுடைய இரக்கத்தை |
| எண்ணு | புத்திபண்ணியிரு |
| வாழி | நீவாழவேணும் உனக்கு இந்தவியவசாயமொருபடிப்படவுண்டாயிடுகவென்றபடி.() |

ஈனமாய வெட்டுநீக்கி யேதமின்றி மீதுபோய்
வானமாள வல்லையேல் வணங்கிவாழ்த்தென் னெஞ்சமே
ஞானமாகி நாயிருகி ஞாலமுற்று மோரெயிற்
றேனமா யிடந்தமூர்த்தி யெந்தைபாத மெண்ணியே. (௱௰௪)

( இ - ள். )

| | |
|---|---|
| ஈனமாயவித்தியாதி | |
| என்னெஞ்சமே | என்னுடையமநஸே |
| ஈனமாய | ஞானசங்கோசமாகியகுறைவைப்பண்ணுகிற |
| எட்டு | அவித்யாகர்மவாஸ்நாருசிபிரகிருதிசம்பந்தங்களாகிறவைந்தும் தாபத்திரயம்மூன்றும் ஆகவிவ்வெட்டையும் |
| நீக்கி | போக்கி |
| ஏதமின்றி | ஸாம்ஸாரிகஸகலதுக்கங்களும்போய |
| மீதுபோய் | அர்ச்சிராதிமார்க்கத்தாலே லீலாவிபூதிக்குமேலேபோய் |
| வானமாளவல்லையேல் | பரமபதத்தையநுபவிக்கவேண்டியிருந்தாயாகில் |
| ஞானமாகி | ஆத்மஞானப்பிரதனுய் |
| நாயிருகி | ஆதித்தியனைப்போலே ஐந்திரியகஹேதுவுமாய் |

| | |
|---|---|
| ஞாலமுற்றும் | பூமியடங்க |
| ஓரெயிற்று | அத்விதீயமானதம்ஷ்ட்ரையிலே |
| ஏனமாய் | மகாவராகமாய் |
| இடந்த | அண்டபித்தியிலோட்டைவிடுவித்த |
| மூர்த்தி | சுரிபோக்கியமானபூர்ணஷாட்குண்யவிக்கிரகத்தையுடைய |
| எந்தை | ஸ்வாமியினுடைய |
| பாதம் | திருவடிகளை |
| எண்ணி | உபாயமாகஅத்தியவஸித்து |
| வணங்கிவாழ்த்து | காலக்ஷேபார்த்தமாகவணங்கிவாழ்த்தப்பார். (௱௰௪) |

அத்தனாகி யன்னையாகி யாளுமெம்பி ரானுமா
யொத்தொவ்வாத பல்பிறப் பொழித்துநம்மை யாட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்துநம்முண் மேவினா
ரெத்தினா லிடர்க்கடற் கிடத்தியேழை நெஞ்சமே. (௱௰௫)

( இ - ள். )

அத்தனாகியித்தியாதி

| | |
|---|---|
| முத்தனார் | முக்தனென்றப்படி அஸ்பிரஷ்டசம்சாரகந்தராயிருக்கிற |
| முகுந்தனார் | முக்திபூமிப்ரதராகையாலே முகுந்தஸ்மாக்கியையுடையரானவர் |
| ஒத்து | ஞானைகாகாரதயா ஏகரூபமாய் |
| ஒவ்வாத | தேவாதிபேதேநநாநாவிதமாயிருக்கிற |
| பல்பிறப்பு | நம்முடையஅநேகஜந்மங்களை |
| ஒழித்து | போக்கி |
| நம்மையாட்கொள்வான் | நம்மையடிமைகொள்ளுகைக்காக |
| அத்தனாகி | பிதாவுமாய் |
| அன்னையாகி | மாதாவுமாய் |
| ஆளுமெம்பிரானுமாய் | அடிமைகொள்ளக்கடவவென் ஸ்வாமியுமா[ய் |
| புகுந்து | பிரவேசித்து |
| நம்முள் | நம்மிடத்திலே |
| மேவினார் | ஒருநீராகப்பொருந்தினார் |

| | |
|---|---|
| ஏழைநெஞ்சமே | மூடமநஸே |
| எத்தினால் | எத்தாலே |
| இடர்க்கடல் | துக்கசாகரத்திலே |
| கிடத்தி | கிடக்கிறாய் (௱௰௫) |

மாறுசெய்த வாளரக்க னுலப்ப வன்றிலங்கை
நீறுசெய்து சென்றுகொன்று வென்றிகொண்ட வீரனார்
வேறுசெய்நு தம்முளென்னை வைத்திடாமை யான்மனக்
கூறுசெய்து கொண்டிறந்த குற்றமெண்ண வல்லனே. ()

( இ - ள். )

மாறித்தியாதி

| | |
|---|---|
| மாறுசெய்த | எதிரிட்டுக்கொண்ட |
| வாள் | ஆயுதத்தையுடைத்தான |
| அரக்கன் | ராவணனுடைய |
| நாள் | ஆயுஸ்ஸானது |
| உலப்ப | நசிக்கும்படியாகிய |
| அன்று | பிராட்டியைப்பிரித்தவன்று |
| இலங்கை | லங்கையை |
| நீறுசெய்து | பஸ்மமாக்கி |
| சென்று | வானரசைநியத்தோடேசென்று |
| கொன்று | சபரிகரமாகவதைத்து |
| வென்றிகொண்ட | ஜயத்தையடைந்த |
| வீரனார் | மஹாவீரனானசக்கிரவர்த்தித்திருமகனானவ[ர்] |
| வேறுசெய்து | இவனமக்குரக்ஷ்யனன்றென்கையாகிறவேறுபாட்டைச்செய்து |
| தம்முள் | தந்திருவுள்ளத்திலே |
| என்னை | ந்யஸ்தபரனானவென்னை |
| வைத்திடாமையால் | வையாதபடியாலே |
| நமன் | யமனானவன் |
| கூறுசெய்துகொண்டு | பெருமாளோடேகூடினவென்னைப்பிரித்து |
| இறந்தகுற்றம் | கழிந்தபாபத்தை |
| எண்ணவல்லனே | எண்ணச்சக்தனோ. (௱௰௬) |

அச்சநோயொ டல்லல்பல் பிறப்பவாய மூப்பிவை
வைத்தசிந்தை வைத்தவாக்கை மாற்றிவானி லேற்றுவான்
அச்சுத னனந்தகீர்த்தி யாதியந்த மில்லவன்
நச்சுநா கணைக்கிடந்த நாதன்வேத கீதனே. (௱யஎ)

(இ - ள்.)

அச்சமித்தியாதி

| | |
|---|---|
| அச்சம் | பயமென்ன |
| நோயொடு | வியாதியென்ன இவற்றோடுகூடின |
| அல்லல் | துன்பமென்ன |
| மூப்பு | ஜரையென்ன |
| பல்பிறப்பு | அநேகஜந்மங்களென்ன |
| ஆய்விவை | ஆன இதுகளையும் |
| வைத்தசிந்தை | இதுகளையநுபவிக்கிறமநஸையும் |
| வைத்தவாக்கை | கீழ்ச்சொன்னவற்றுக்காசிரயமானசரீரத்தையும் |
| மாற்றி | தவிர்த்து |
| வானில் | பரமபதத்திலே |
| ஏற்றுவான் | ஏறப்பண்ணும்ஸ்வபாவத்தையுடையவன் |
| அச்சுதன் | ஆசிருதரைஒருநாளுநழுவவிடாதவன் |
| அனந்தகீர்த்தி | அத்தால்வந்தஅபரிச்சிந்நகுணத்வாபிரதையையுடையவன் |
| ஆதியந்தமில்லவன் | ஆசிருதவிஷயத்திற்செய்யுமவற்றுக்கு முதலுமுடிவுமில்லாதவன் |
| நச்சு | பிரதிகூலவிஷயத்தில் விஷத்தையுமிழுகிற |
| நாகணை | திருவநந்தாழ்வானாகிறபடுக்கையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| நாதன் | சர்வஸ்வாமியானவன் |
| வேதகீதன் | வேதங்களாலே அச்சுதத்வாதிநாபிரதிபாதிக்கப்படுமவன் இப்படிப்பட்டவன்வானிலேற்றுவானென்றந்வயம். (௱யஎ) |

சொல்லினுந் தொழிற்கணுந் தொடக்கறாத வன்பினும்
அல்லினும் பகலினோடு மானமாலை காலையும்
வல்லிநாண் மலர்க்கிழத்தி நாதபாத போதினிற்
புல்லியுள்ளம் விள்விலாது பூண்டுமீண்ட தில்லையே. (௱யஅ)

( இ - ள். )

சொல்லினுமித்தியாதி

| | |
|---|---|
| சொல்லினும் | வாக்கிலும் |
| தொழிற்கணும் | காயிகவியாபாரங்களிலும் |
| தொடக்கு | சம்பந்தம் |
| அறுத | விச்சேதியாத |
| அன்பினும் | பிரேமத்திலும் |
| நன் | நன்றான |
| அல்லினும் | இராத்திரியிலும் |
| பகலினோடுமான | பகலோடுங்கூடின |
| மாலை | சந்தியையிலும் |
| காலையும் | பிராதஸ்ஸந்தியையிலும் |
| வல்லி | படர்ந்திருக்கிற |
| நாள் | ஸத்யோவிகசிதமான |
| மலர் | தாமரைப்புஷ்பத்தையிருப்பிடமாகவுடைய |
| கிழத்தி | நாயகியானபெரியபிராட்டியாருக்கு |
| நாத | ஸ்வாமியானவனே |
| பாதபோதினை | உன்னுடையதிருவடித்தாமரையை |
| உள்ளம் | என்னுடையமநஸ்ஸானது |
| புல்லி | அணைந்து |
| வள்விலாது | விச்சேதியாதபடிக்கு |
| பூண்டு | பிரவணமாய் |
| மீண்டதில்லையே | இருவருமானசேத்தியிலே அனுபவிக்கவிழிந்துகுணாந்தரங்களிலுமீளுகிறதில்லை. () |

பொன்னிசூ ழரங்கமேய பூவைவண்ண மாயகேள்
என்னதாவி யென்னும்வல் வினையினுட் கொழுந்தெழுந்
துன்னபாத மென்னநின்ற வொண்சுடர்க் கொழுமலர்
மன்னவந்து பூண்டுவாட்ட மின்றியெங்கு நின்றதே. (௱௰௬)

( இ - ள். )

பொன்னியித்தியாதி

| | |
|---|---|
| பொன்னி | திருக்காவேரியாலே |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| அரங்கமேய | கோயிலிலேயெழுந்தருளியிருக்கிற |

| | |
|---|---|
| பூவைவண்ண | பூவைப்பூப்போன்றநிறத்தையுடைய |
| மாய | ஆச்சரியபூதரானபெரியபெருமாளே |
| கேள் | கேட்டருளவேணும் |
| என்னதாவியென்னும் | என்னுடையஆத்மாவாகிற |
| வல்வினையினுள் | பிரபலபாபராசியிலே |
| கொழுந்து | சிரத்தாங்குரமானது |
| எழுந்து | உதித்து |
| உன்னபாதமென்னநின்ற | உன்னுடையதிவ்வியவிக்கிரகமென்றுநின்ற வேதாந்தங்களில்பிரதி பாத்தியமாகாநின்ற |
| ஒண்சுடர் | நிரவதிகதேஜஸென்ன |
| கொழுமலர் | ஸ்பீதமானபுஷ்பமென்ன இதுகளிலே |
| மன்னவந்து | ஸ்திரமாகவந்து |
| பூண்டு | வியக்தியந்தரங்களிலந்வயியாதபடி அவகாஹித்து |
| வாட்டமின்றி | குறையாமற்படி |
| எங்கும் | ஸ்வரூபகுணவிபூதிகளிலெங்கும் |
| நின்றதே | வியாபியாநின்றது பாதமென்றுசேஷபூதன்வார்த்தையாகையாலே திருமேனியைலக்ஷிக்கிறது (௱௰௯) |

இயக்கறுத பல்பிறப்பி லென்னைமாற்றி யின்றுவந்
துயக்கொண்மேக வண்ணனண்ணி யென்னிலாய தன்னுளே
மயக்கினான்றன் மன்னுசோதி யாதலாலென் னாவிதான்
இயக்கலா மறுத்தறுத வின்பவீடு பெற்றதே. (௱௨௰)

(இ - ள்.)

| | |
|---|---|
| இயக்கறுதவித்தியாதி | |
| இயக்கு | இயங்குதல் நடையாட்டமென்றபடி |
| அறுத | விச்சேதியாத அந்யோந்யசம்பந்தமானவென்றபடி |
| பல்பிறப்பில் | அநேகஜந்மங்களினின்றும் |
| என்னை | அக்ஞானவென்னை |
| மாற்றி | மாற்றவென்றதாய்மாற்றுகைக்காகவென்றபடி |
| இன்றுவந்து | நிர்ஹேதுகமாகவந்து |

| | |
|---|---|
| உயக்கொள் | உஜ்ஜீவிப்பிக்கிற |
| மேகவண்ணன் | காளமேகநிறசியாமனைவன் |
| நண்ணி | நானிருந்தவிடத்திலேகிட்டி |
| என்னிலாயதன்னுளே | தன்னிலாயவென்னுளேயென்றுகூட்டித்த னக்குப்பிரகாரமான என்இருதயத்திலே |
| தன் | தன்னுடைய |
| மன் | நித்தியமான [தை |
| சோதி | ஜோதிர்மயமான திவ்வியமங்களவிக்கிரகத் |
| மயக்கினன் | பிரிக்கவொண்ணுதபடிகலந்தான் |
| மயக்கம் | செறிவு |
| ஆதலால் | ஆகையாலே |
| என்னவிதான் | என்னுடையஆத்மாவானது |
| இயக்கெலாம் | அந்யோந்யசம்பந்தங்களாகிற அவித்தியா கர்மவாசநா ருசிப்பிரகிருதிசம்பந்தங்களை யெல்லாம் |
| அறுத்து | போக்கி |
| அறுதவின்பவீடு | யாவதாத்மபாவவிச்சேதமில்லாத நிரதிச யாநந்தமானகைங்கரியரூபமோக்ஷத்தை |
| பெற்றதே | லபித்ததே. (௱உ0) |

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

திருச்சந்தவிருத்தம்முற்றிற்று.

---

